உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சைவத்தோத்திரமஞ்சரி



இது
சுத்தபோசந பாகசாத்திரம், வைத்தியக் கைமுறைகள்
ஆகிய நூல்களின் பதிப்பாசிரியர்,
**முதலியார் சு. திருச்சிற்றம்பலவரால்**
தொகுக்கப்பெற்றது.



சுன்னாகம் :
வட - இலங்கைத் தமிழ்நூற் பதிப்பகம்

1949 [விலை : ரூபா 4-25

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சைவத்தோத்திர மஞ்சரி

இது

சுத்தபோசந பாகசாத்திரம், வைத்தியக் கைமுறைகள்
ஆகிய நூல்களின் பதிப்பாசிரியர்,

**முதலியார் சு. திருச்சிற்றம்பலவரால்**

தொகுக்கப்பெற்றது.

சுன்னுகம் :

வட - இலங்கைத் தமிழ் நூற் பதிப்பகம்

 1949 [விலை : ரூபா 4-25

திருமகள் அழுத்தகம்
சுன்னாகம்

# பொருளடக்கம்



**குறிப்பு:**— 74-வது பக்கம்முதல் 90-வது வரையுள்ள பக்கங்கள் பெரியபுராணம் 12-வது திருமுறை என்ற பகுதியின் பின்வரவேண்டியன.

# முகவுரை

---

எனது வாழ்நாளில் மூன்று விஷயங்கள் என் கருத்தைக் கவர்ந்தன. முதலாவதாக, சைவசமயிகளாகிய நாங்கள் சமயாசாரத்தின்படி சுத்தமான உணவுகளை உண்ணல் வேண்டும் என்னும் வேட்கையாகும். இவ்வேட்கையின் தூண்டுதலினாலே எல்லோருக்கும் பயன்படக்கூடியதாகச் **சுத்தபோசனபாகசாத்திரம்** என்னும் நூலை 1935-ம் ஆண்டில் வெளியிட்டிருக்கிறேன்.

இரண்டாவதாக, சிறு நோய்கள் ஏற்படுங் காலத்தில் மருத்துவர்களைத் தேடி அலையாமல் வீட்டில் உள்ள பொருள்களைக்கொண்டு தாமாகவே சிகிச்சைசெய்துகொள்ளும்படியாக வைத்தியக்கைமுறை நூல் ஒன்றை வெளிப்படுத்த வேண்டுமென விரும்பினேன். 1910-ம் ஆண்டு தொடக்கம் இந்த எண்ணம் என் மனதிற் குடிகொண்டிருந்தமையால் அன்று முதல் 28 வருஷகாலமாக அனுபவத்திற் காணப்பட்டவைகளையும், வைத்தியர்கள், சந்நியாசிகள் ஆகியவர்களுடன் நெடுங்காலமாக நட்புப்பூண்டு அவர்களது கைகண்ட முறைகளையும் அறிந்து குறிப்புகள் வைத்துக்கொண்டு 1938-ம் ஆண்டில் **வைத்தியக் கைமுறைகள்** என்னும் நூலை வெளியிட்டுள்ளேன்.

மூன்றாவதாக என் கருத்தை முக்கியமாகக் கவர்ந்த விஷயம் மூவர் அருளிச்செய்த தேவாரங்களேயாகும். தென் இந்தியாவிலுள்ள ஆதீனங்களில் ஓதுவாமூர்த்திகள் தேவாரங்களைப் பண்முறையோடு பாடிவருவது எல்லாருக்கும் நன்கு தெரிந்த விஷயமே. ஆனால் அவ்வாறு தேவாரங்களை ஓதுபவர்கள் நமது யாழ்ப்பாணத்திலே மிகமிகச் சிலரே எனலாம்.

இக்காலம் பள்ளிக்கூடங்களில் மாணவ மாணவிகள் தேவாரங்களைப் பாட முன்வந்திருக்கிறார்களாதலால் இச்சமயத்தில் ஒரு வழிகாட்டியாக ஒரு நூலை வெளியிட்டால் அது அவர்களுக்கு ஒரு துணையாக இருக்குமென எண்ணி அத்துறையில் முயற்சிபண்ணத் துணிந்தேன்.

இற்றைக்கு அனேக ஆண்டுகளுக்கு முன்னரே, தென் இந்தியா சென்றபோது அங்குள்ள ஆதீனங்களில் வசித்துத் தேவாரப் பண்களை முறையாக ஓதக் கற்ற ஒருவருடைய நட்பு எனக்குக் கிடைத்தது. அவருடன் யான் சிலகாலம் செலவழித்துப் பண்களுடைய, இராகம், தாளம், நடை, காலம் முதலியனவற்றை வகுத்துக்கொண்டேன்.

ஸ்ரீமத் விபுலாநந்த அடிகளுடனும் இதுவிஷயமாகப் பலமுறை கலந்து பேசியதால் அவர் தந்துள்ள குறிப்புகளும் இந்நூலுக்குத் துணையாயின.

இதனேடமையாது, தெரிந்தெடுத்த சில தேவாரங்களைப் படிப்பதற்கு அவற்றின் சொற் பொருளும் விளங்கினல் நன்மை பயக்கும் என விரும்பி, கற்றவர்களுடைய உதவியால் அவற்றிற்குப் பொழிப்புரைகளையும் எழுதுவித்து இதிற் சேர்க்கலானேன். இப் பொழிப்புரைகளைப் பரிசோதித்து வேண்டிய வேண்டிய இடங்களில் திருத்தி அமைத்துக் கொடுத்த வித்துவான் பிரமஸ்ரீ சி. கணேசையர் அவர்களுக்குத் தமிழுலகம் மிகவும் கடப்பாடுடையதாகும்.

அன்றியும், பண் முறைகளில் வகைக்கொவ்வொரு தேவாரம் சுரப்படுத்தி இத்துடன் சேர்த்துக்கொண்டால் அவற்றைக் கற்கும் மாணவ மாணவிகளுக்கு அது பெரிதும் பயன்படுமென்று பல அன்பர்கள் கூறியுள்ள விருப்பத்தையும் ஏற்று அதனையும் இயன்றவாறு ஒப்பேற்ற முயன்றேன்.

இற்றைக்கு 15 வருடங்களுக்கு முன்னர் காலஞ்சென்ற வழக்கறிஞர் கொழும்பு மு. திருவிளங்கம் அவர்கள் யாழ்ப்பாணம் வந்து சிலகாலம் இங்கு தங்கியிருந்து, தேவாரப் பண்களை முறைப்படி ஓதக்கூடிய ஒருவரைப் பாடச்செய்து அவற்றையெல்லாம் சுரவித்துவான் புத்துவாட்டி நா. சோமசுந்தரம் என்பவரைக்கொண்டு சுரப்படுத்தி எழுதிக்கொண்டு கொழும்பு சென்றமை என் ஞாபகத்துக்கு வந்தது. அவர் எழுதிவைத்த சுவடியைச் சிரமம்பாராது தேடி எடுத்து எனக்குக் கொடுத்த நவாலியூர் ஸ்ரீமான் தம்பையா உபாத்தியாயர் அவர்கள் பிரயாசை பாராட்டத்தக்கது.

தேவாரத் திருமுறைகள் ஏழோடும் நில்லாமல் எஞ்சிய ஐந்து திருமுறைகளிலுமுள்ள பக்திரசம்வாய்ந்த பாடல்களிற்



சிலவும், திருப்புகழ், பட்டணத்தார் பாடல் முதலியனவற்றிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்ட சில பாக்களும் இதிற் சேர்க்கப்பட்டுள்ளன.

இப்பண்களை வகுத்து, தாளம் இராகம் முதலியனவற்றை சிரமம்பாராது எழுதி உதவிய இராமநாதன் கல்லூரித் தமிழ்ப்பண்டிதர் திரு. த. குமாரசுவாமிப்பிள்ளை அவர்களுக்கும் கையெழுத்துப் பிரதிகளை எழுதுவதில் உதவிபுரிந்த நண்பர்களுக்கும் ஏனையோர்க்கும் எனது நன்றி உரியதாகும்.

யாழ்ப்பாணம்<br>
1-10-49

**சு. திருச்சிற்றம்பலம்**

---

## அணிந்துரை

சைவ மக்களுக்குப் பெரிதும் பயன்படக்கூடிய முறையில் இந்நூல், முதலியார் திரு. சு. திருச்சிற்றம்பலம் அவர்களால் தொகுக்கப்பட்டுள்ளது. திருக்கோயில்களிலும் சைவாதீனங்களிலும் பல நூற்றாண்டுகளாகப் பாதுகாக்கப்பட்டுவந்த பண் முறைகள், இக் காலத்தில் சிதைந்து வழங்குவதைச் சகியாத முதலியார் அவர்கள் அரிதின் முயன்று தேவாரப் பாடல்களுக்குரிய பண்களின் கட்டளை, பேதம், இராகம், தாளம் முதலியனவற்றைக் கூடியமட்டும் வரையறை செய்து தேவாரப் பாசுரங்களை ஒழுங்கான முறையில் ஓதுவதற்கான சாதனங்களுடன், இந் நூலை வெளியிட் டிருக்கின்றார்கள். இக் காலத்தில் வழங்கிவரும் ஸ்வர அமைப்புக் குறியீடுகளுடன் சில தேவாரப் பாசுரங்கள் இந் நூலில் அச்சிடப்பட்டிருப்பது படிப்போர் பலருக்கு மிக உதவியாக இருக்கும். சில முக்கியமான தேவாரப் பாடல்களுக்குத் தெளிவான பொழிப்புரையும் எழுதப்பட்டுள்ளது. தேவார, திருவாசகப் பாசுரங்களுடன் ஏனைய திருமுறைகளினின்று சிறந்த பாக்களும் பட்டணத்துப் பிள்ளையார், அருணகிரிநாதர், தாயுமானவர் முதலிய பெரியோர்கள் அருளிய பக்திச் சுவை நிறைந்த பாடல்களும் இந் நூலிற் சேர்க்கப்பட்டுள்ளன.

சைவப்பாடசாலைகளிற் சமயபாடம் கற்கும் மாணவர்களின் பாராயணத்துக் கேற்ற தோத்திர நூலாக இஃது அமைந்துள்ளது. பலவித சிறப்புவாய்ந்த இந்நூல் சைவ மக்கள் உவந்து போற்றுவதற்குரியதாகும்.

**இராமநாதன் கல்லூரி**
**சுன்னாகம்** }

**சு. நடேசபிள்ளை**

உ

# சைவத் தோத்திர மஞ்சரி

## I பண்

சரிகம பதநியென் றேழெழுத்தாற் றானம்
வரிபரந்த கண்ணினால் வைத்துத்—தெரிவரிய
வேழிசையுந் தோன்று மிவற்றுள்ளே பண்பிறக்குஞ்
சூழமுத லாஞ்சுற்றத் துளை. 1

பாவோ டணைதலிசை யென்றார்பண் ணென்றார்
மேவார் பெருந்தான மெட்டானும்—பாவா
யெடுத்தன் முதலா விருநான்கும் பண்ணிப்
படுத்தமையாற் பண்ணென்றும் பார். 2

[பெருந்தானம் 8—நெஞ்சு, மிடறு, நாக்கு, மூக்கு, அண்ணம், உதடு, பல், தலை என்பனவாம். எடுத்தல் முதலாக 8—எடுத்தல், படுத்தல், நலிதல், நம்பிதம், குடிலம், ஒலி, உருட்டு, தாக்கு என்பனவாம்.]

மன்னு மளிகள் மலர்தேடி மதுவை யுண்டு வரைதோறும்
பன்னு சார லவையெங்கும் பற்றி யார்க்கும் வகையேபோன்
முன்ன மோசை பலவாகி முழுதும் வேறாய் மிடறென்றாய்த்
தென்னவென் னுமிசைவளர்த்துப் பண்ணுமாறுதேன்போல. 3

நாற்பெரும் பண்ணும் சாதி நான்கும்
பாற்படு திறனும் பண்ணெனப் படுமே. 4

பண் ஒவ்வொன்றும் பண்ணங்கம் சுத்தாங்கம் என இருவகையாகப் பாடப்படும்.

பண்ணங்கமாவது தாளம் இராகம் முதலியவற்றோடு பாடுதல்.

சுத்தாங்கமாவது தாளமில்லாது இராகத்துடன் நெட்டிசையிற் பாடுதலேயாம்.

பண்ணானது பகற்பண், இராப்பண், பொதுப்பண் என மூவகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது.

## மூவகைப் பண்கள்

**பகற்பண் 12**

புறநீர்மை, காந்தாரம், பியந்தைக்காந்தாரம், கௌசிகம், இந்தளம், தக்கேசி, சாதாரி, நர்த்தராகம், நைவளம், பழம் பஞ்சுரம், காந்தார பஞ்சமம், பஞ்சமம் என்பனவாம்.

**இராப்பண் 9**

தக்கராகம், பழந்தக்கராகம், சீகாமரம், கொல்லி, கொல்லிக்கௌவாணம், வியாழக்குறிஞ்சி, மேகராகக்குறிஞ்சி, அந்தாளிக்குறிஞ்சி, குறிஞ்சி என்பனவாம்.

**பொதுப்பண் 3**

செவ்வழி, செந்துருத்தி, தாண்டகம் என்பனவாம்.

திருமுறைகண்ட புராணத்தில் ஒவ்வொரு பண்ணுக்கும் கட்டளைப் பேதங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன. கட்டளைப் பேதமென்பது பண்களின் நடை வித்தியாசத்தைக் குறிப்பதாகும். ஒன்று முதல் ஒன்பது வரையும் கட்டளைப் பேதங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன.

தமிழ்நாட்டுத் தேவாரப் பண்கள் கி. பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்த அப்பர், சம்பந்தராலும், ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்த சுந்தரமூர்த்திகளாலும் பாடப்பட்டவையென நாமறிகிறோம்.

## திருமுறைகண்ட புராணத்திற் சொல்லப்பட்டிருக்கும் பண்வகை

சொன்னட்ட பாடைக்குத் தொகையெட்டுக் கட்டளையா
மின்னிசையாற் றருந்தக்க ராகத்தேழ் கட்டளையாம்
பன்னுபழந் தக்கரா கப்பண்ணின் மூன்றுளதா
முன்னரிய தக்கேசிக் கேரிரண்டு வருவித்தார்.

மேவுகுறிஞ் சிக்கஞ்சு வியாழக்குறிஞ் சிக்காறு
பாவுபுகழ் மேகரா கக்குறிஞ்சி பாலிரண்டு
தேவுவந்த விந்தளத்தின் செய்திக்கு நான்கினிய
தாவில்புகழ்க் காமரத்தின் றன்மைதனக் கிரண்டமைத்தார்.



காந்தார மாகிய பியந்தையாங் கட்டளைக்கு
வாய்ந்தவகை மூன்றாகி வன்னட்ட ராகத்திற்
கேய்ந்தவகை யிரண்டாக்கிச் செவ்வழியொன் றாக்கியிசைக்
காந்தார பஞ்சமத்தின் கட்டளைமூன் றாக்கினார்.

கொல்லிக்கு நாலாக்கிக் கவுசியத்துக் கூறும்வகை
சொல்லிரண் டாக்கிமிகு தூங்கிசைநேர் பஞ்சமத்திற்
கொல்லையினி லொன்றாக்கிச் சாதாரிக் கொன்பதாப்
புல்லுமிசைப் புறநீர்மைக் கொன்றாகப் போற்றினார்.

அந்தாளிக் கொன்றாக்கி வாகீச ருந்தமிழின்
முந்தாய பலதமிழுக் கொன்றென்று மொழிவித்து
நந்தாத நேரிசையாங் கொல்லிக்கு நாட்டிலிரண்
டுந்தாடுங் குறுந்தொகைக்கோர் கட்டளையா விரித்துரைத்தார்.

தாண்டகமாம் பாவுக்கோர் கட்டளையாத் தாபித்தங்
காண்டகையார் தடுத்தாண்ட வையரரு டுய்யமுறைக்
கீண்டிசைசே ரிந்தளத்துக் கிரண்டாக வெடுத்துரைத்து
நீண்டதக்க ராகத்துக் கிரண்டாக நிகழ்வித்தார்.

கூறரிய நட்டராகத் திரண்டு கொல்லிக்கு
வேறுவகை மூன்றாக மிகுந்தபழம் பஞ்சுரத்துக்
கேறும்வகை யிரண்டாக்கி யின்னிசைதேர் தக்கேசிப்
பேறிசையா றாக்கியதிற் காந்தாரம் பிரித்திரண்டாம்.

ஒன்றாகுங் காந்தார பஞ்சமத்துக் கோரிரண்டா
நன்றான சீர்நட்ட பாடைக்கு நவின்றுரைக்கிற்
குன்றாத புறநீர்மைக் கிரண்டாகுங் கூறுமிசை
யொன்றாகக் காமரத்துக் கொன்றாகப் போற்றினார்.

உற்றவிசைக் குறிஞ்சிக்கோ ரிரண்டாக வகுத்தமைத்துப்
பற்றரிய செந்துருத்திக் கொன்றாக்கிக் கவுசிகப்பாற்
றுற்றவிசை யிரண்டாக்கித் தூயவிசைப் பஞ்சமத்துக்
கற்றவிசை யொன்றாக்கி யரனருளால் விரித்தமைத்தார்.

## கட்டளைகள்

| | | சம்பந்தர் | | சுந்தரர் | | அப்பர் | |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | நட்டபாடை | 8 | கட்டளைகள் | 2 | கட்டளைகள் | — | கட்டளை |
| 2. | கௌசிகம் | 2 | ,, | 2 | ,, | — | |
| 3. | கொல்லி | 4 | ,, | 3 | ,, | 1 | ,, |
| 4. | பியந்தைக்காந்தாரம் | 3 | ,, | — | | 1 | ,, |
| 5. | காந்தாரம் | 3 | ,, | 2 | ,, | 1 | ,, |
| 6. | தக்கராகம் | 7 | ,, | 2 | ,, | — | |
| 7. | தக்கேசி | 2 | ,, | 6 | ,, | — | |
| 8. | இந்தளம் | 4 | ,, | 2 | ,, | 1 | ,, |
| 9. | சீகாமரம் | 2 | ,, | 1 | ,, | 1 | ,, |
| 10. | குறிஞ்சி | 5 | ,, | 2 | ,, | 1 | ,, |
| 11. | வியாழக்குறிஞ்சி | 6 | ,, | — | | — | |
| 12. | புறநீர்மை | 1 | ,, | 2 | ,, | — | |
| 13. | பழம்பஞ்சுரம் | — | ,, | 2 | ,, | 1 | ,, |
| 14. | பழந்தக்கராகம் | 3 | ,, | — | | 1 | ,, |
| 15. | காந்தாரபஞ்சமம் | 3 | ,, | 1 | ,, | 1 | ,, |
| 16. | சாதாரி | 9 | ,, | — | | 1 | ,, |
| 17. | நட்டராகம் | 2 | ,, | 2 | ,, | — | |
| 18. | மேகராகக்குறிஞ்சி | 2 | ,, | — | | — | |
| 19. | செந்துருத்தி | — | | 1 | ,, | 1 | ,, |
| 20. | அந்தாளிக்குறிஞ்சி | 1 | ,, | — | | — | |
| 21. | செவ்வழி | 1 | ,, | — | | — | |
| 22. | பஞ்சமம் | 1 | ,, | 1 | ,, | — | |
| 23. | நேரிசை | — | | — | | 2 | ,, |
| 24. | குறுந்தொகை | — | | — | | 1 | ,, |
| 25. | தாண்டகம் | — | | — | | 1 | ,, |

## பண்களும் அவற்றிற்குரிய இராகங்களும்

| பண் | தற்கால வழக்கில் உள்ளன | பொன் ஓதுவார் காலத்திலுள்ளன | விபுலானந்த அடிகள் ஆராய்ச்சியிற் கண்டவை |
|---|---|---|---|
| 1. நைவளம் | கெம்பீரநாட்டை | நாட்டைக்குறிஞ்சி | நாட்டைக்குறிஞ்சி |
| 2. கௌசிகம் | பைரவி | பைரவி | சுத்தசாவேரி |
| 3. கொல்லி | நவரோஸ் | சிந்துகன்னடா | |
| 4. பியந்தைக் காந்தாரம்<br>5. காந்தாரம் | நவரோஸ் | ஹெஜ்ஜுஜ்ஜி | சாடவம் |
| 6. தக்கராகம் | காம்பூதி | கன்னடகாம்பூதி | டக்கா |
| 7. தக்கேசி | காம்பூதி | காம்பூதி | டக்காகைசியம் |
| 8. இந்தளம் | நாதநாமக்கிரியை | நொளிதபஞ்சமி | சுத்ததந்நியாசி |
| 9. சீகாமரம் | நாதநாமக்கிரியை | நாதநாமக்கிரியை | |
| 10 குறிஞ்சி | எதுகுலகாம்பூதி | மலகரி | குரஞ்சி |
| 11. வியாழக்குறிஞ்சி | சௌராட்டிரம் | சௌராட்டிரம் | |
| 12. பஞ்சமம் | சௌராட்டிரம் | ஆகிரி | பஞ்சமம் |
| 13. புறநீர்மை | பூவாளம் | ஸ்ரீகண்டி | |
| 14. பழம்பஞ்சுரம் | சங்கராபரணம் | சங்கராபரணம் | |
| 15. பழந்தக்கராகம் | ஆரபி | சுத்தசாவேரி | |
| 16. காந்தாரபஞ்சமம் | கேதாரகௌளம் | கேதாரகௌளம் | மோகனம் |
| 17. சாதாரி | பந்துவராளி | பந்துவராளி | தேவமனோகரி |
| 18. நர்த்தராகம் | பந்துவராளி | பந்துவராளி | இந்தோளம் |
| 19. மேகராகக்குறிஞ்சி | நீலாம்புரி | நீலாம்புரி | மேகரஞ்சி |
| 20. செந்துருத்தி | மத்தியமாவதி | மத்தியமாவதி | மத்தியமாவதி |
| 21. அந்தாளிக்குறிஞ்சி | சாமா | சைவதேசாட்சி | |
| 22. செவ்வழி | எதுகுலகாம்பூதி | எதுகுலகாம்பூதி | கரகரப்பிரியா |
| 23. குறுந்தொகை | நாதநாமக்கிரியை | நொளிதபஞ்சமி | |
| 24. திருநேரிசை | நவரோஸ் | சிந்துகன்னடா | |
| 25. திருவிருத்தம் | பைரவி | சிந்துகன்னடா | |
| 26. திருத்தாண்டகம் | அரிகாம்பூதி | பியாகடை | |

## விபுலானந்த அடிகளார் ஆராய்ச்சியிற் கண்டபடி சில பண்களுக்கு வழக்கிலில்லாத இராகங்களும் அவற்றிற்குரிய ஆரோகண அவரோகண சுரங்களும்

| பண் | இராகம் | ஆரோகணம் | அவரோகணம் |
|---|---|---|---|
| 1. கொல்லி | சிந்துகன்னடா | சமகமரி கமபதச | சநிதப மகரிச |
| 2. காந்தாரம் | சாடவம் | சரிகம பநிச | சநிபம கரிச |
| 3. தக்கராகம் | டக்கா | சகம$^{2}$ நிச | சநிதப ம$^{2}$கரிச |
| 4. தக்கேசி | டக்கைசிகம் | சரிகம பதநிச | சநித மகச |
| 5. சீகாமரம் | நாதநாமக்கிரியை | நிசரிகம பதநிச | நிதபம கரிசநி |
| 6. குறிஞ்சி | குரஞ்சி | சநிசரி, கமபத | தபமக ரிசநிச |
| 7. பஞ்சமம் | பஞ்சமம் | சரிபத நிச | சநித மகச |
| 8. புறநீர்மை | ஸ்ரீகண்டி | சரி$^{1}$கம$^{2}$பதநிச | சநிதபம$^{2}$கரி$^{1}$ச |
| 9. பழந்தக்கராகம் | சுத்தசாவேரி | சரி மபதச | சதபம ரிச |
| 10. சாதாரி | தேவமனோகரி | சரிம பதநி$^{1}$ச | சநி,$^{1}$ தநி$^{1}$பமரிச |
| 11. நர்த்தராகம் | இந்தோளம் | சம கம த$^{1}$நிச | சநித1மகச |
| 12. மேகராகக்குறிஞ்சி | மேகரஞ்சி | சரி பதநி$^{1}$ச | சநி$^{1}$தபரிச |

## நடைகள்

**1. தவளைத்தத்து**

தவளை இடைவெளி விட்டுத் தத்திச் செல்வதுபோல் செல்வது.

**2. இடபநடை**

இடபம் ஏரி நிமிர்ந்து இருபுறத்தும் தலையசைத்துக் கெம்பீரமாக நிமிர்ந்து செல்வதுபோற் செல்வது.

**3. மயில்நடை** (படர்சிறை மஞ்ஞை)

மயில் அமைதியாக அடிக்கடி தலையையுங் கழுத்தையும் அசைத்தும் உள் இழுத்தும் நீட்டியும் நடப்பதுபோற்செல்வது.

**4. குக்குடநடை**

கோழி அடிக்கடி தலையைத் தாழ்த்தியும் உயர்த்தியும் கழுத்தை அசைத்தும் நடப்பதுபோற் செல்வது.

**5. அரவினோட்டம்**

பாம்பு உடலை நெளித்தும் தலையை இருபுறத்தும் வளைத்தும் ஓடுவதுபோற் செல்வது.

**6. அன்னநடை**

அன்னம் அமைதியாக அழகுடன்நடப்பதுபோற் செல்வது.



**7. பிடிநடை**

பெண் யானை பின் காலிரண்டையும் மெல்லினமாக வைத்து, முன்காலிரண்டையும் சிறிது விரைந்து வைத்துக் குலுக்கிச் சொகுசாய் நடப்பதுபோற் செல்வது.

**8. பாற்றியக்கம்** (பருந்தின் வீழ்வு)

பருந்து ஒரே இடத்திற் சுழன்று நின்றும் மேலுயர்ந்தும் திடீரெனக் கீழே தாழ்ந்தும் இயங்குவதுபோற் செல்வது.

**9. ஆற்றொழுக்கு**

தாளம்பட்ட ஓசையுடன் இடையறாது ஒழுகும் ஆற்று நீர்போலச் செல்வது.

## பன்னிரண்டு திருமுறைகள்

மூவாண்டில் முழுமுதற் கடவுளின் பேரருள் எளிதிற் கைவரப் பெற்றுச் சைவப் பெருநெறிக்கு விளைந்திருந்த பேரிடர் தீர்த்து உலகெங்கும் சிவனருட் பேரொளியை விளக்குவித்த திருஞானசம்பந்தசுவாமிகள் திருவாய்மலர்ந் தருளிய திருப்பதிகங்கள் முதல் மூன்று திருமுறைகளாகும்.

நினைப்பாலும், பாட்டாலும், உழவாரத்தாலும் மூவகைத் தொண்டும் முற்ற ஆற்றிச் சமண, சைவ மதங்களின் வேறு பாடுகளை நனி பெரிது காட்டிக் குழைந்துருகப்பாடியவரும், நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தராலே அப்பரே என்று அழைக் கப்பெற்றவரும், அப்பூதியடிகளால் போற்றப்பெற்ற திருப் பெயரை உடையவரும், அருள் ஞானத் தந்தை என்று உலகம் போற்றும் பெருமை வாய்ந்தவருமான திருநாவுக்கரசு சுவாமி கள் அருளிச்செய்த திருப்பதிகங்கள் அடுத்த மூன்று திரு முறைகளாகும்.

காளைப்பருவத்தில் இறைவனால் தடுத்தாட்கொள்ளப் பெற்று இறைவன்பால் தோழமைத் திருவருளும் அடியார் பால் மெய்யடிமைப் பேரருளும் ஒருங்கு வாய்ந்து உலகியல் ஒழுக்கத்தின் நின்று அவ்வொழுக்கத்தின் வாயிலாக இறை வனை வணங்குமுறை தெளிவித்துத் தமிழ் பாடிய நம்பியா ரூரர் அருளிச்செய்தவை ஏழாவது திருமுறையாகும்.

இறைவனே குருவடிவில் எழுந்தருளித் தம்மையாட் கொள்ளும் பெறற்கரும் பேறுபெற்றுப் புத்தரை வென்ற

மாணிக்கவாசகப் பெருமான் பாடியருளிய திருவாசகம், திருக் கோவையார் என்பவை எட்டாந் திருமுறையாகும்.

திருமாளிகைத்தேவர், சேந்தனார் முதலான பேரருட் சான்றோர் அருளிச்செய்த திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்பன ஒன்பதாந் திருமுறையாகும்.

திருமூலர் அருளிச்செய்த திருமந்திரம் பத்தாந் திரு முறையாகும்

காரைக்காலம்மையார் முதலானோர் அருளிச்செய்தவை பதினோராந் திருமுறையாகும்.

சேக்கிழார் அருளிச்செய்த பெரியபுராணம் பன்னிரண் டாம் திருமுறையாகும்.

## திருமுறைகள் ஓதும் விதி

பன்னிரு திருமுறைகளையும் வரிசைக் கிரமமாக ஓதி முடித்தல் வேண்டும். ஒன்று கழிக்கப்படினும் குற்றமாம்.

தேவாரம் படிக்கும்போது தவிர்க்கவேண்டிய குற்றங்க ளாவன: பண்குற்றம், எழுத்துப்பிழை, சொற்பிழை, பொருட் பிழை, நாசியாற் பாடுதல், வாயைக் குகைபோற் திறத்தல், வாய் கோணுதல், அழுமுகங் காட்டல், கண்களாடுதல், தலை நடுங்குதல், புருவமேறுதல், மிடறு வீங்குதல், பற்கள் தோன்றுதல் முதலியனவாம்.

## பண்களுக்குரிய தாளவிபரம்

அ = அடி, ல = லகு, வீ = வீச்சு
ஜம்பை — திஸ்ரசாதி — அ, ல$^2$, அ$^2$, வீ = 6
,, சதுரசுரசாதி— அ, ல$^3$, அ$^2$, வீ = 7
திரிபுடை — திஸ்ரசாதி — அ, ல$^2$, அ, வீ, அ, வீ = 7
(ஆதி)—சதுரசுரசாதி— அ, ல$^3$, அ, வீ, அ, வீ = 8
திரிபுடை விஷமம்—2 அடி கெதி —2 அடி மெது
ஏகதாளம்—திஸ்ரசாதி— அ, ல$^2$ = 3
,, சதுரசுரம் அ, ல$^3$ = 4
,, கண்டசாதி அ, ல$^4$ = 5
ரூபகம்—திஸ்ரசாதி அ, வீ, அ, ல$^2$ = 5
,, ,, (அ$^2$, வீ)
சாப்பு—அ, அ$^2$ (தக, தகிட)



## விபுலானந்த அடிகளார் சுருதி வீணையில் அமைக்கப்பெற்ற 22 சுருதிகளாவன

1. ஆதார சட்சமம் — ச
2. ஏக சுருதி ரிஷபம் — ரி$^1$
3. துவி சுருதி ரிஷபம் — ரி$^2$
4. சுத்த ரிஷபம் — ரி$^3$
5. சதுர் சுருதி ரிஷபம் — ரி$^4$
6. சுத்த காந்தாரம் — க$^1$
7. சாதாரண காந்தாரம் — க$^2$
8. அந்தர காந்தாரம் — க$^3$
9. சியுத மத்தியம காந்தாரம் — க$^4$
10. சுத்த மத்தியமம் — ம$^1$
11. தீவா மத்தியமம் — ம$^2$
12. தீவரதர மத்தியமம் — ம$^3$
13. தீவரதம மத்தியமம் — ம$^4$
14. பஞ்சமம் — ப
15. ஏக சுருதி தைவதம் — த$^1$
16. துவி சுருதி தைவதம் — த$^2$
17. சுத்த தைவதம் — த$^3$
18. சதுர் சுருதி தைவதம் — த$^4$
19. சுத்த நிஷாதம் — நி$^1$
20. கைசிக நிஷாதம் — நி$^2$
21. காகலி நிஷாதம் — நி$^3$
22. சியுத ஷட்ஜ நிஷாதம் — நி$^4$

## II. பண் தேவாரங்கள்

**1. பண்**—நைவளம் (நட்டபாடை). **இராகம்**—கெம்பீரநாட்டை. **சுவை**-சாந்தம். **தாளம்**—(1) ரூபகம், (2) ஜம்பை. **நடை**—தவளைத்தத்து. **காலம்**—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருப்பிரமபுரம்] திருமுறை 1

திருச்சிற்றம்பலம்.

தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடிபூசியென் னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனைநாட்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

அருநெறியமறை வல்லமுனியகன் பொய்கையலர்மேய
பெருநெறியபிர மாபுரமேவிய பெம்மானிவன் றன்னை
ஒருநெறியமனம் வைத்துணர்ஞானசம் பந்தன்னுரைசெய்த
திருநெறியதமிழ் வல்லவர்தொல்வினை தீர்தலெளிதாமே.

திருச்சிற்றம்பலம்.

**தாளம்**—ரூபகம். **நடை**—மயில்நடை. **காலம்**—மத்திமம்.

சுந்தரமூர்த்திகள் [திருக்கேதீச்சரம்] திருமுறை 7

திருச்சிற்றம்பலம்.

நத்தார்புடை ஞானன்பசு வேறிந்நனை கவிழ்வாய்
மத்தம்மத யானையுரி போர்த்தமழு வாளன்
பத்தாகிய தொண்டர்தொழு பாலாவியின் கரைமேல்
செத்தாரெலும் பணிவான்திருக் கேதீச்சரத் தானே.

அங்கத்துறு நோய்கள்அடி யார்மேலொழித் தருளி
வங்கம்மலி கின்றகடன் மாதோட்டநன் னகரில்
பங்கஞ்செய்த மடவாளொடு பாலாவியின் கரைமேல்
தெங்கம்பொழில் சூழ்ந்ததிருக் கேதீச்சரத் தானே

மூவரென இருவரென முக்கண்ணுடை மூர்த்தி
மாவின்கனி தூங்கும்பொழின் மாதோட்டநன் னகரில்
பாவம்வினை யறுப்பார்பயில் பாலாவியின் கரைமேல்
தேவன்எனை யாள்வான்திருக் கேதீச்சரத் தானே.



கறையார்கடல் சூழ்ந்தகழி மாதோட்டநன் னகருள்
சிறையார்பொழில் வண்டியாழ்செய்யுங் கேதீச்சரத் தானை
மறையார்புக ழூரன்அடித் தொண்டன்உரை செய்த
குறையாத்தமிழ் பத்துஞ்சொலக் கூடாகொடு வினையே.

திருச்சிற்றம்பலம்

**தாளம்**—ரூபகம். **நடை**—மயில்நடை. **காலம்**—மத்திமம்.

சம்பந்தர் [திருவண்ணமலை] திருமுறை 1

திருச்சிற்றம்பலம்.

உண்ணாமுலை யுமையாளொடு முடனாகிய வொருவன்
பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ
மண்ணார்ந்தன அருவித்திரள் மழலைம்முழ வதிரும்
அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவண்ண மறுமே.

வெம்புந்திய கதிரோனொளி விலகும்விரி சாரல்
அம்புந்திமூ வெயிலெய்தவ னண்ணாமலை யதனைக்
கொம்புந்துவ குயிலாலுவ குளிர்காழியுண் ஞான
சம்பந்தன தமிழ்வல்லவ ரடிபேணுதல் தவமே.

திருச்சிற்றம்பலம்.

**2. பண்**—கௌசிகம். **இராகம்**—பைரவி. **சுவை**—வீரம்; அற்புதம். **தாளம்**—ஆதி. **நடை**-குக்குடநடை. **காலம்**—விளம்பம்.

திருஞானசம்பந்தர் திருமுறை 3

திருச்சிற்றம்பலம்.

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
நாத னாம நமச்சி வாயவே.

நந்தி நாம நமச்சிவா யவெனும்
சந்தை யாற்றமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யான்மகிழ்ந் தேத்தவல் லாரெலாம்
பந்த பாச மறுக்கவல் லார்களே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ரூபகம். நடை—அன்னநடை. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருவானைக்கா] திருமுறை 3

திருச்சிற்றம்பலம்.

வானைக்காவில் வெண்மதி மல்குபுல்கு வார்சடைத்
தேனைக்காவி யின்மொழித் தேவிபாக மாயினான்
ஆனைக்காவி லண்ணலை அபயமாக வாழ்பவர்
ஏனைக்காவல் வேண்டுவா ரேதுமேதம் இல்லையே

ஊழியூழி வையகத் துயிர்கள்தோற்று வானொடும்
ஆழியானுங் காண்கிலா வானைக்காவி லண்ணலைக்
காழிஞான சம்பந்தன் கருதிச்சொன்ன பத்திவை
வாழியாகக் கற்பவர் வல்வினைகண் மாயுமே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஆதி. நடை—குக்குடநடை. காலம்—விளம்பம்.

திருஞானசம்பந்தர் திருமுறை 3

திருச்சிற்றம்பலம்

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

நல்லார்கள் சேர்புகலி ஞானசம் பந்தனல்ல
எல்லார்க ளும்பரவு மீசனை யேத்துபாடல்
பல்லார்க ளும்மதிக்கப் பாசுரஞ் சொன்னபத்தும்
வல்லார்கள் வானோருல காளவும் வல்லரன்றே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ரூபகம். நடை—அன்னநடை. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருவாலவாய்] திருமுறை 3

திருச்சிற்றம்பலம்.

வீடலால வாயிலாய் விழுமியார்க ணின்கழல்
பாடலால வாயிலாய் பரவநின்ற பண்பனே
காடலால வாயிலாய் கபாலிநீள்க டிம்மதில்
கூடலால வாயிலாய் குலாயதென்ன கொள்கையே.



குற்றநீ குணங்கணீ கூடலால வாயிலாய்
சுற்றநீ பிரானுநீ தொடர்ந்திலங்கு சோதிநீ
கற்றநூற் கருத்துநீ யருத்தமின்ப மென்றிவை
முற்றுநீ புகழ்ந்துமுன் னுரைப்பதென்மு கம்மனே.

போயநீர் வளங்கொளும் பொருபுனற் புகலியான்
பாயகேள்வி ஞானசம் பந்தனல்ல பண்பினால்
ஆயசொல்லின் மாலைகொண் டாலவாயி லண்ணலைத்
தீயதீர வெண்ணுவார்கள் சிந்தையாவர் தேவரே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ரூபகம். நடை—அன்னநடை. காலம்—மத்திமம்,

திருஞானசம்பந்தர் [திருவான்மியூர்] திருமுறை 3

திருச்சிற்றம்பலம்.

விரையார் கொன்றையினாய் விடமுண்ட மிடற்றினனே
உரையார் பல்புகழா யுமைநங்கையொர் பங்குடையாய்
திரையார் தெண்கடல்சூழ் திருவான்மி யூருறையும்
அரையா வுன்னையல்லா லடையாதென தாதரவே.

பொன்போ லுஞ்சடைமேற் புனல்தாங்கிய புண்ணியனே
மின்போ லும்புரிநூல் விடையேறிய வேதியனே
தென்பால் வையமெலாந் திகழுந்திரு வான்மிதன்னில்
அன்பா வுன்னையல்லா லடையாதென தாதரவே.

கன்றாருங் கமுகின் வயல்சூழ்தரு காழிதனில்
நன்றான புகழான் மிகுஞானசம் பந்தனுரை
சென்றார் தம்மிடர்தீர் திருவான்மி யூரதன்மேல்
குன்றா தேத்தவல்லார் கொடுவல்வினை போயறுமே.

திருச்சிற்றம்பலம்.

3. பண்—கொல்லி. இராகம்—நவரோஸ்

தாளம்—ஆதி. நடை—குக்குடநடை. காலம்—மத்திமம்.

திருநாவுக்கரசுநாயனார் [திருவதிகைவீரட்டானம்] திருமுறை 4

திருச்சிற்றம்பலம்.

கூற்றா யினவா றுவிலக் ககிலீர்
கொடுமை பலசெய் தனநா னறியேன்
ஏற்றா யடிக்கே இரவும் பகலும்
பிரியா துவணங் குவனெப் பொழுதும்

தோற்றா தென்வயிற் றினகம் படியே
குடரோ டுதுடக் கிமுடக் கியிட
ஆற்றே னடியே னதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே.

நெஞ்சம் உமக்கே யிடமா கவைத்தேன்
நினையா தொருபோ துமிருந் தறியேன்
வஞ்ச மிதுவொப் பதுகண் டறியேன்
வயிற்றோ டுதுடக் கிமுடக் கியிட
நஞ்சா கிவந்தென் னைநலி வதனை
நணுகா மற்றுரந் துகரந் துமிடீர்
அஞ்சே லுமென்னீ ரதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே.

சலம்பூ வொடுதூ பமறந் தறியேன்
தமிழோ டிசைபா டன்மறந் தறியேன்
நலந்தீங் கிலுமுன் னைமறந் தறியேன்
உன்னா மமென்னா வின்மறந் தறியேன்
உலந்தார் தலையிற் பலிகொண் டுழல்வாய்
உடலுள் ளுறுசூ லைதவிர்த் தருளாய்
அலந்தே னடியே னதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே.

போர்த்தா யங்கொரா னையினீ ருரிதோல்
புறங்கா டரங்கா நடமா டவல்லாய்
ஆர்த்தா னரக்கன் றனைமால் வரைக்கீழ்
அடர்த்திட் டருள்செய் தவது கருதாய்
வேர்த்தும் புரண்டும் விழுந்தும் எழுந்தால்
என்வே தனையா னவிலக் கியிடாய்
ஆர்த்தார் புனல்சூ ழதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே.

திருச்சிற்றம்பலம்.



**தாளம்**—ரூபகம். **நடை**—பிடி நடை. **காலம்**—மத்திமம்.

**திருஞானசம்பந்தர்** [திருவாலவாய்] **திருமுறை 3**

திருச்சிற்றம்பலம்.

மானி னேர்விழி மாத ராய்வழு திக்கு மாபெருந் தேவிகேள்
பானல் வாயொரு பால னீங்கிவ னென்று நீபரி வெய்திடேல்
ஆனை மாமலை யாதி யாயவி டங்க ளிற்பல அல்லல்சேர்
ஈனர் கட்கெளி யேன லேன்திரு ஆல வாயர னிற்கவே.

எக்க ராமமண் கைய ருக்கெளி யேன லேன்திரு ஆலவாய்ச்
சொக்க னென்னு ளிருக்க வேதுளங் கும்முடித் தென்னன்
[முன்னிவை
தக்க சீர்ப்புக லிக்கு மன்றமிழ் நாதன் ஞானசம் பந்தன்வாய்
ஒக்க வேயுரை செய்த பத்துமு ரைப்ப வர்க்கிட ரில்லையே.

திருச்சிற்றம்பலம்.

**தாளம்**—ரூபகம். **நடை**—தவளைத்தத்து. **காலம்**—மத்திமம்.

**திருஞானசம்பந்தர்** [திருந்துதேவன்குடி] **திருமுறை 3**

திருச்சிற்றம்பலம்.

மருந்துவேண் டில்லிவை மந்திரங் கள்ளிவை
புரிந்துகேட் கப்படும் புண்ணியங் கள்ளிவை
திருந்துதே வன்குடித் தேவர்தே வெய்திய
அருந்தவத் தோர்தொழும் அடிகள்வே டங்களே.

சேடர்தே வன்குடித் தேவர்தே வன்றனை
மாடமோங் கும்பொழின் மல்குதண் காழியான்
நாடவல் லதமிழ் ஞானசம் பந்தன
பாடல்பத் தும்வல்லார்க் கில்லையாம் பாவமே

திருச்சிற்றம்பலம்

**தாளம்**—ரூபகம். **நடை**—தவளைத்தத்து. **காலம்**—மத்திமம்.

**திருஞானசம்பந்தர்** [திருப்பிரமபுரம்] **திருமுறை 3**

திருச்சிற்றம்பலம்.

மண்ணினல் லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணினல் லகதிக் கியாதுமோர் குறைவிலைக்
கண்ணினல் லஃதுறும் கழுமல வளநகர்ப்
பெண்ணினல் லாளொடும் பெருந்தகை யிருந்ததே.

போதையார் பொற்கிண்ணத் தடிசில்பொல் லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்
காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே.

கருந்தடந் தேன்மல்கு கழுமல வளநகர்ப்
பெருந்தடங் கொங்கையோ டிருந்தஎம் பிரான்றனை
அருந்தமிழ் ஞானசம் பந்தன செந்தமிழ்
விரும்புவா ரவர்கள்போய் விண்ணுல காள்வரே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ரூபகம். நடை—பிடி நடை. காலம்—மத்திமம்.

**சுந்தரமூர்த்திநாயனார் [திருப்புகலூர்] திருமுறை 7**

திருச்சிற்றம்பலம்.

தம்மையே புகழ்ந் திச்சை பேசினுஞ்
சார்வினுந் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடாதே யெந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்!
இம்மையே தருஞ் சோறுங் கூறையும்
ஏத்தலா மிடர் கெடலுமாம்
அம்மையே சிவ லோக மாள்வதற்
கியாது மையுற வில்லையே.

செறுவி னிற்செழுங் கமல மோங்குதேன்
புகலூர் மேவிய செல்வனை
நறவம் பூம்பொழி னாவ லூரன்வ
னப்பகை யப்பன் சடையன்றன்
சிறுவன் வன்றொண்ட னூரன் பாடிய
பாடல் பத்திவை வல்லவர்
அறவ னாரடி சென்று சேர்வதற்
கியாது மையுற வில்லையே.

திருச்சிற்றம்பலம்.



4. பண்—கொல்லிக்கௌவாணம். இராகம்—நவரோஸ்.
தாளம்—சாப்பு. நடை—தவளைத்தத்து. காலம்—மத்திமம்.

**சுந்தரமூர்த்திநாயனார் [திருத்தொண்டத்தொகை] திருமுறை 7**

திருச்சிற்றம்பலம்.

தில்லைவா ழந்தணர்தம் மடியார்க்கு மடியேன்
றிருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே யென்னாத வியற்பகைக்கு மடியேன்
இளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டற் கடியேன்
அல்லிமென் முல்லையந்தா ரமர்நீதிக் கடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே.

பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கு மடியேன்
பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன்
றிருவாரூர் பிறந்தார்கள் எல்லார்க்கு மடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கு மடியே
னப்பாலு மடிச்சார்ந்த வடியார்க்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே.

திருச்சிற்றம்பலம்.

5. பண்—பியந்தைக்காந்தாரம். இராகம்—நவரோஸ்.
தாளம்—திரிபுடை. நடை—அரவினோட்டம். காலம்—மத்திமம்.

**திருஞானசம்பந்தர் [கோளறுதிருப்பதிகம்] திருமுறை 2**

திருச்சிற்றம்பலம்.

வேயுறு தோளி பங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமே லணிந்தெ
னுளமே புகுந்த வதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன்வியாழம் வெள்ளி
சனி பாம்பிரண்டு முடனே
ஆசறு நல்லநல்ல வவைநல்ல நல்ல
வடியா ரவர்க்கு மிகவே

தேனமர் பொழில் கொளாலை விளைசெந்நெ றுன்னி
வளர்செம்பொ னெங்கு நிகழ
நான்முக னாதி யாய பிரமா புரத்து
மறைஞான ஞான முனிவன்
தானுறு கோளு நாளு மடியாரை வந்து
நலியாத வண்ண முரைசெய்
ஆனசொல் மாலை யோது மடியார்கள் வானில்
அரசாள்வ ராணை நமதே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஆதி. நடை—ஆற்றொழுக்கு. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருவரத்துறை] திருமுறை 2

திருச்சிற்றம்பலம்.

எந்தை யீசனெம் பெருமா னேறமர் கடவுளென் றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லாற் சென்றுகை கூடுவ தன்றால்
கந்த மாமல ருந்திக் கரும்புனல் நிவாமல்கு கரைமேல்
அந்தண் சோலைநெல் வாயி லரத்துறை யடிகள்தம் மருளே.

கறையினார் பொழில் சூழ்ந்த காழியுள் ஞானசம் பந்தன்
அறையும் பூம்புனல் பரந்த வரத்துறை யடிகடம் மருளை
முறைமை யாற்சொன்ன பாடல் மொழியு மாந்தர்தம் வினை [போய்ப்
பறையு மையுற வில்லைப் பாட்டிவை பத்தும் வல்லார்க்கே.

திருச்சிற்றம்பலம்.

6. பண்—காந்தாரம். இராகம்—நவரோஸ்.
தாளம்—ரூபகம். நடை—அன்னநடை. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருவாலவாய்] திருமுறை 2.

திருச்சிற்றம்பலம்.

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் றிருவாலவா யான்றிரு நீறே.



ஆற்ற வடல்விடை யேறு மாலவா யான்றிரு நீற்றைப்
போற்றிப் புகலிநி லாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்னனுட லுற்ற தீப்பிணி யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஆதி. நடை—ஆற்றொழுக்கு. காலம்—மத்திமம்.

சுந்தரமூர்த்திநாயனார் [திருவாரூர்] திருமுறை 7.

திருச்சிற்றம்பலம்.

கரையுங் கடலு மலையுங் காலையு மாலையு மெல் லாம்
உரையில் விரவி வருவா னொருவ னுருத்திர லோகன்
வரையின் மடமகள் கேள்வன் வானவர் தானவர்க் கெல் லாம்
அரைய னிருப்பது மாரூ ரவரெம்மையு மாள்வரோ கே ளீர்.

எந்தை யிருப்பது மாரூர் அவ ரெம்மையு மாள்வரோ வென்று
சிந்தை செய்யுந்தினம் வல் லான் றிருமரு வுந்திர டோளன்
மந்த முழவ மியம் பும் வளவய னாவலா ரூரன்
சந்த மிசையொடும் வல் லார் தாம்புக ழெய்துவர் தாமே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—திரிபுடை. நடை—தவளைத்தத்து. காலம்—விளம்பம்.

திருநாவுக்கரசுநாயனார் [திருக்கச்சியேகம்பம்] திருமுறை 4

திருச்சிற்றம்பலம்.

கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்
விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை
அரவாடச் சடைதாழ வங்கையினி லனலேந்தி
இரவாடும் பெருமானை யென்மனத்தே வைத்தேனே.

கைப்போது மலர்தூவிக் காதலித்து வானோர்கள்
முப்போது முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை
அப்போது மலர்தூவி யைம்புலனு மகத்தடக்கி
எப்போது மினியானை யென்மனத்தே வைத்தேனே.

அடுத்தானை யுரித்தானை யருச்சுனற்குப் பாசுபதம்
கொடுத்தானைக் குலவரையே சிலையாகக் கூரம்பு
தொடுத்தானைப் புரமெரியச் சினமல்கு கயிலாயம்
எடுத்தானைத் தடுத்தானை யென்மனத்தே வைத்தேனே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ரூபகம். நடை—அன்னநடை. காலம்—மத்திமம்.

திருநாவுக்கரசுநாயனார் [திருவையாறு] திருமுறை 4

திருச்சிற்றம்பலம்.

மாதர் பிறைக் கண்ணி யானை மலையான் மகளொடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர் பின் புகுவேன்
யாதுஞ் சுவடு படாம லையா றடை கின்ற போது
காதன் மடப் பிடி யோடும் களிறு வருவன கண்டேன்
கண்டே னவர் திருப் பாதம் கண்டறி யாதன கண்டேன்

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ரூபகம். நடை—அன்னநடை. காலம்—மத்திமம்.

திருநாவுக்கரசுநாயனார் [திருவாரூர்] திருமுறை 4

திருச்சிற்றம்பலம்.

பாடிளம் பூதத்தி னானும் பவளச்செவ் வாய்வண்ணத் தானும்
கூடிள மென்முலை யாளைக் கூடிய கோலத்தி னானும்
ஓடிள வெண்பிறை யானு மொளிதிகழ் சூலத்தி னானும்
ஆடிளம் பாம்பசைத் தானு மாரூர மர்ந்தவம் மானே

நரியைக் குதிரைசெய் வானு நரகரைத் தேவுசெய் வானும்
விரதங்கொண் டாடவல் லானும் விச்சின்றி நாறுசெய் வானும்
முரசதிர்ந் தானைமுன் னோட முன்பணிந் தன்பர்க ளேத்த
அரவரைச் சாத்திநின் றானு மாரூர மர்ந்தவம் மானே.

நீறுமெய் பூசவல் லானு நினைப்பவர் நெஞ்சத்து ளானும்
ஏறுகந் தேறவல் லானு மெரிபுரை மேனியி னானும்
நாறு கரந்தையி னானு நான்மறைக் கண்டத்தி னானும்
ஆறு சடைக்கரந் தானு மாரூர மர்ந்தவம் மானே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—திரிபுடை-விஷமம். நடை—தவளைத்தத்து. காலம்—மத்திமம்.

திருநாவுக்கரசுநாயனார் [திருவாரூர்] திருமுறை 4

திருச்சிற்றம்பலம்.

மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த
மேனியான் றாடொ ழாதே
உய்யலா மென்றெண்ணி யுறிதூக்கி
யுழிதந்தெ னுள்ளம் விட்டுக்



கொய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ
மயிலாலு மாரூ ரரைக்
கையினாற் றொழாதொழிந்து கனியிருக்கக்
காய்கவர்ந்த கள்வ னேனே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஏகம். நடை—தவளைத்தத்து. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருவாரூர்] திருமுறை 2

திருச்சிற்றம்பலம்.

பவனமாய்ச் சோடையாய் நாவெழாப்
பஞ்சுதோய்ச் சட்டவுண்டு
சிவனதாட் சிந்தியாப் பேதைமார்
போலநீ வெள்கினாயே
கவனமாய்ப் பாய்வதோ ரேறுகந்
தேறிய காளகண்டன்
அவனதா ரூர்தொழு துய்யலா
மையல்கொண் டஞ்சநெஞ்சே.

திருச்சிற்றம்பலம்.

7. பண்—தக்கராகம். இராகம்—காம்பூதி. சுவை—வீரம், அற்புதம்.

தாளம்—ரூபகம். நடை—மயில்நடை. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருக்கோலக்கா] திருமுறை 1

திருச்சிற்றம்பலம்.

மடையில் வாளை பாய மாதரார்
குடையும் பொய்கைக் கோலக் காவுளான்
சடையும் பிறையும் சாம்பற் பூச்சுங்கீழ்
உடையும் கொண்ட வுருவ மென்கொலோ.

நலங்கொள் காழி ஞான சம்பந்தன்
குலங்கொள் கோலக் காவு ளானையே
வலங்கொள் பாடல் வல்ல வாய்மையார்
உலங்கொள் வினைபோ யோங்கி வாழ்வரே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஆதி. நடை—ஆற்றொழுக்கு. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருவாழ்கொளிபுத்தூர்] திருமுறை 1

திருச்சிற்றம்பலம்.

பொடியுடை மார்பினர் போர்விடை யேறிப்
    பூதக ணம்புடை சூழக்
கொடியுடை யூர்திரிந் தையங்
    கொண்டு பலபல கூறி
வடிவுடை வாணெடுங் கண்ணுமை பாக
    மாயவன் வாழ்கொளி புத்தூர்க்
கடிகமழ் மாமல ரிட்டுக்
    கறைமிடற் றானடி காண்போம்.

கல்லுயர் மாக்கட னின்றுமு ழங்கும்
    கரைபொரு காழிய மூதூர்
நல்லுயர் நான்மறை நாவி
    னற்றமிழ் ஞானசம் பந்தன்
வல்லுயர் சூலமும் வெண்மழு வாளும்
    வல்லவன் வாழ்கொளி புத்தூர்ச்
சொல்லிய பாடல்கள் வல்லார்
    துயர் கெடுத லெளிதாமே.

திருச்சிற்றம்பலம்.

8. பண்—தக்கேசி. இராகம்—காம்பூதி. சுவை—அச்சம்.

தாளம்—திரிபுடைவிஷமம். நடை—மயில்நடை. காலம்—விளம்பம்.

திருஞானசம்பந்தர் [திருவண்ணாமலை] திருமுறை 1

திருச்சிற்றம்பலம்.

பூவார் மலர்கொண் டடியார் தொழுவார்
    புகழ்வார் வானோர் கள்
மூவார் புரங்க ளெரித்த வன்று
    மூவர்க் கருள் செய்தார்
தூமா மழைநின் றதிர வெருவித்
    தொறுவின் னிரையோ டும்
ஆமாம் பிணைவந் தணையுஞ் சார
    லண்ணா மலையார் ரே.



அல்லா டரவ மியங்குஞ் சார
    லண்ணா மலையா ரை
நல்லார் பரவப் படுவான் காழி
    ஞான சம்பந் தன்
சொல்லான் மலிந்த பாட லான
    பத்து மிவை கற்று
வல்லா ரெல்லாம் வானோர் வணங்க
    மன்னி வாழ்வா ரே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஆதி. நடை—குக்குடநடை. காலம்—விளம்பம்.

சுந்தரமூர்த்திநாயனார் [திருவாரூர்] திருமுறை 7

திருச்சிற்றம்பலம்.

பொன்னு மெய்ப்பொரு ளுந்தரு வானைப்
    போக முந்திரு வும்புணர்ப் பானைப்
பின்னை யென்பிழை யைப்பொறுப் பானைப்
    பிழையெ லாந்தவி ரப்பணிப் பானை
இன்ன தன்மைய னென்றறி யொண்ணா
    வெம்மா னையெளி வந்தபி ரானை
அன்னம் வைகும் வயற்பழ னத்தணி
    ஆரூ ரானை மறக்கலு மாமே.

ஒரூ ரென்றுல கங்களுக் கெல்லாம்
    உரைக்க லாம்பொரு ளாயுடன் கூடி
காரூ ருங்கமழ் கொன்றைநன் மாலை
    முடியன் காரிகை காரண மாக
ஆரூ ரைம்மறத் தற்கரி யானை
    யம்மான் றன்திருப் பேர்கொண்ட தொண்டன்
ஆரூ ரன்அடி நாஉரை வல்லா
    ரமர லோகத் திருப்பவர் தாமே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஜம்பை. நடை—மயில்நடை. காலம்—விளம்பம்.

சுந்தரமூர்த்திநாயனார் [திருக்கச்சியேகம்பம்] திருமுறை 7

திருச்சிற்றம்பலம்.

ஆலந் தானுகந் தமுதுசெய் தானை
யாதி யையம ரர்தொழு தேத்தும்
சீலந் தான்பெரி துமுடை யானைச்
சிந்திப் பாரவர் சிந்தையு ளானை
ஏல வார்குழ லாளுமை நங்கை
யென்று மேத்தி வழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே.

பெற்ற மேறுகந் தேறவல் லானைப்
பெரிய வெம்பெரு மானென்றெப் போதும்
கற்ற வர்பர வப்படு வானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற தென்று
கொற்ற வன்கம்பன் கூத்தனெம் மானைக்
குளிர்பொ ழிற்றிரு நாவலா ரூரன்
நற்ற மிழிவை யீரைந்தும் வல்லார்
நன்னெ றியுல கெய்துவர் தாமே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஆதி. நடை—குக்குடநடை. காலம்—விளம்பம்.

சுந்தரமூர்த்திநாயனார் (திருப்புன்கூர்) திருமுறை 7

திருச்சிற்றம்பலம்

அந்த ணாளனுன் னடைக்கலம் புகுத
வவனைக் காப்பது காரண மாக
வந்த காலன்ற னாருயி ரதனை
வவ்வி னாய்க்குன்றன் வண்மைகண் டடியேன்
எந்தை நீயெனை நமன்றமர் நலியி
லிவன்மற் றென்னடி யானென விலக்கும்
சிந்தை யால்வந்துன் றிருவடி யடைந்தேன்
செழும்பொ ழிற்றிருப் புன்கூரு ளானே.



கம்ப மால்களிற் றின்னுரி யானைக்
காமற் காய்ந்ததோர் கண்ணுடை யானைச்
செம்பொ னேயொக்குந் திருவுரு வானைச்
செழும்பொ ழிற்றிருப் புன்கூரு ளானை
உம்ப ராளியை யுமையவள் கோனை
யூரன் வன்றொண்ட னுள்ளத் தாலுகந்
தன்பி னாற்சொன்ன அருந்தமி ழைந்தோ
டைந்தும் வல்லவ ரருவினை யிலரே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஆதி. நடை—குக்குடநடை. காலம்—விளம்பம்.

சுந்தரமூர்த்திநாயனார் [திருவொற்றியூர்] திருமுறை 7

திருச்சிற்றம்பலம்.

அழுக்கு மெய்கொடுன் றிருவடி யடைந்தேன்
அதுவு நான்படப் பாலதொன் றானால்
பிழுக்கை வாரியும் பால்கொள்வ ரடிகேள்
பிழைப்ப னாகிலுந் திருவடி பிழையேன்
வழுக்கி வீழினுந் திருப்பெய ரல்லான்
மற்று நானறி யேன்மறு மாற்றம்
ஒழுக்க வென்கணுக் கொருமருந் துரையா
யொற்றி யூரெனும் ஊருறை வானே.

ஓதம் வந்துல வுங்கரை தன்மே
லொற்றி யூருறை செல்வனை நாளும்
ஞாலந் தான்பர வப்படு கின்ற
நான்ம றையங்க மோதிய நாவன்
சீலந் தான்பெரி தும்மிக்க வல்ல
சிறுவன் வன்றொண்ட னூரனு ரைத்த
பாடல் பத்திவை வல்லவர் தாம்போய்ப்
பரகதி திண்ண நண்ணுவர் தாமே.

திருச்சிற்றம்பலம்.

### சுத்தாங்கம்

சுந்தரமூர்த்திநாயனர் [திருக்கோலக்கா] திருமுறை 7

திருச்சிற்றம்பலம்.

நாளு மின்னிசை யாற்றமிழ் பரப்பு
ஞான சம்பந்த னுக்குல கவர்முன்
தாள மீந்தவன் பாடலுக் கிரங்குந்
தன்மை யாளனை யென்மனக் கருத்தை
ஆளும் பூதங்கள் பாடநின் றாடு
மங்க ணன்றன்னை யென்கண மிறைஞ்சுங்
கோளி லிப்பெருங் கோயிலுள் ளானைக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே.

திருச்சிற்றம்பலம்.

9. பண்—இந்தளம். இராகம்—நாதநாமக்கிரியை. சுவை—அற்புதம்.
தாளம்—ஆதி. நடை—தவளைத்தத்து. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருச்சிக்கல்] திருமுறை 2

திருச்சிற்றம்பலம்.

வானுலா வும்மதி வந்துலா வும்மதின் மாளிகை
தேனுலா வும்மலர்ச் சோலைமல் குந்திகழ் சிக்கலுள்
வேனல்வே ளைவிழித் திட்டவெண் ணெய்ப்பெரு மானடி
ஞானமா கந்நினை வார்வினை யாயின நையுமே.

கந்த மார்பொழிற் காழியுண் ஞானசம் பந்தனல்
செந்தண் பூம்பொழிற் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மானடிச்
சந்த மாச்சொன்ன செந்தமிழ் வல்லவர் வானிடை
வெந்த நீறணி யும்பெரு மானடி மேவரே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஆதி. நடை—ஆற்றொழுக்கு. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருமருகல்] திருமுறை 2

திருச்சிற்றம்பலம்.

சடையா யெனுமால் சரணீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவளுண் மெலிவே.



சிந்தா யெனுமால் சிவனே யெனுமால்
முந்தா யெனுமால் முதல்வா வெனுமால்
கொந்தார் குவளை குலவும் மருகல்
எந்தாய் தகுமோ விவளே சறவே.

வயஞா னம்வல்லார் மருகற் பெருமான்
உயர்ஞா னமுணர்ந் தடியுள் குதலால்
இயன்ஞா னசம்பந் தனபாடல் வல்லார்
வியல்ஞா னமெல்லாம் விளங்கும் புகழே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ரூபகம். நடை—பருந்தின்வீழ்வு. காலம்—மத்திமம்.

திருநாவுக்கரசுநாயனர் [விடந்தீர்த்ததிருப்பதிகம்] திருமுறை 4

திருச்சிற்றம்பலம்.

ஒன்றுகொ லாமவர் சிந்தையு யர்வரை
ஒன்றுகொ லாமுய ரும்மதி சூடுவர்
ஒன்றுகொ லாமிடு வெண்டலை கையது
ஒன்றுகொ லாமவ ரூர்வது தானே.

பத்துக்கொ லாமவர் பாம்பின்கண் பாம்பின்பல்
பத்துக்கொ லாமெயி றுந்நெரிந் துக்கன
பத்துக்கொ லாமவர் காயப்பட் டான்றலை
பத்துக்கொ லாமடி யார்செய்கை தானே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ரூபகம். நடை—தவளைத்தத்து. காலம்—விளம்பம்.

சுந்தரமூர்த்திநாயனர் [திருவெண்ணெய்நல்லூர்] திருமுறை 7

திருச்சிற்றம்பலம்.

பித்தாபிறை சூடிப்பெரு மானேயரு ளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்
அத்தாவுனக் காளாயினி யல்லேனென லாமே. [டுறையுள்

காரூர்புன லெய்திக்கரை கல்லித்திரைக் கையால்
பாரூர்புக ழெய்தித்திகழ் பன்மாமணி யுந்திச்
சீரூர்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறை
ஆரூரனெம் பெருமாற்கா ளல்லேனென லாமே. [யுள்

திருச்சிற்றம்பலம்.

10. பண்—சீகாமரம். இராகம்— நாதநாமக்கிரியை.
தாளம்—திரிபுடை. நடை—அன்ன நடை. காலம்—விளம்பம்.
திருஞானசம்பந்தர் [திருப்புள்ளிருக்குவேளூர்] திருமுறை 2

திருச்சிற்றம்பலம்.

கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தங் கதிர்மதியம்
உள்ளார்ந்த சடைமுடியெம் பெருமானா ருறையுமிடந்
தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானார்க் கரையனிடம் புள்ளிருக்கு வேளூரே.

பண்ணொன்ற விசைபாடு மடியார்கள் குடியாக
மண்ணின்றி விண்கொடுக்கு மணிகண்டன் மருவுமிடம்
எண்ணின்றி முக்கோடி வாணாள துடையானைப்
புண்ணொன்றப் பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஜம்பை (சதுரஜாதி). நடை—அன்ன நடை. காலம்—விளம்பம்.
திருஞானசம்பந்தர் [திருச்சாய்க்காடு] திருமுறை 2

திருச்சிற்றம்பலம்.

மண்புகார் வான்புகுவர் மனமிளையார் பசியாலுங்
கண்புகார் பிணியறியார் கற்றாருங் கேட்டாரும்
விண்புகா ரெனவேண்டா வெண்மாட நெடுவீதித்
தண்புகார் சாய்க்காட்டெந் தலைவன்றாள் சார்ந்தாரே.

நீநாளு நன்னெஞ்சே நினைகண்டா யாரறிவார்
சாநாளும் வாழ்நாளுஞ் சாய்க்காட்டெம் பெருமாற்கே
பூநாளுந் தலைசுமப்பப் புகழ்நாமஞ் செவிகேட்ப
நாநாளு நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஜம்பை (சதுரசுரஜாதி). நடை—அன்ன நடை. காலம்-விளம்பம்.
திருஞானசம்பந்தர் [திருவாமாத்தூர்] திருமுறை 2

திருச்சிற்றம்பலம்.

கைம்மாவின் றோல்போர்த்த காபாலி வானுலகில்
மும்மா மதிலெய்தான் முக்கணான் பேர்பாடி
அம்மா மலர்ச்சோலை வாமாத்தூ ரம்மானெம்
பெம்மானென் றேத்தாதார் பேயரிற் பேயரே.

திருச்சிற்றம்பலம்.



பண்—சுத்தாங்கம்.

திருஞானசம்பந்தர் [திருவெண்காடு] திருமுறை 2

திருச்சிற்றம்பலம்.

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே.

திருச்சிற்றம்பலம்.

11. பண்—குறிஞ்சி. இராகம்—எதுகுலகாம்போதி.
தாளம்—திரிபுடை. நடை—தவளைத்தத்து. காலம்—விளம்பம்.
திருஞானசம்பந்தர் [கோயில்] திருமுறை 1

திருச்சிற்றம்பலம்.

கற்றாங்கெரி யோம்பிக் கலியை வாராமே
செற்றார்வாழ் தில்லைச் சிற்றம்பல மேய
முற்றாவெண் டிங்கண் முதல்வன் பாதமே
பற்றாநின் றாரைப் பற்றா பாவமே.

செல்வநெடு மாடஞ் சென்றுசே ணோங்கிச்
செல்வமதி தோயச் செல்வமுயர் கின்ற
செல்வர்வாழ் தில்லைச் சிற்றம்பல மேய
செல்வன்கழ லேத்துஞ் செல்வஞ் செல்வமே.

ஞாலத்துயர் காழி ஞானசம் பந்தன்
சீலத்தார் கொள்கைச் சிற்றம்பல மேய
சூலப்படை யானைச் சொன்ன தமிழ்மாலை
கோலத்தாற் பாட வல்லார் நல்லாரே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—திரிபுடை. நடை—பிடி நடை. காலம்—விளம்பம்.
திருஞானசம்பந்தர் [திருச்சிராப்பள்ளி] திருமுறை 1

திருச்சிற்றம்பலம்.

நன்றுடை யானைத் தீயதி லானை நரைவெள்ளே
றொன்றுடை யானை யுமையொரு பாக முடையானைச்
சென்றடை யாத திருவுடை யானைச் சிராப்பள்ளிக்
குன்றுடை யானைக் கூறவென் னுள்ளங் குளிருமே.

தேனயம் பாடுஞ் சிராப்பள்ளி யானைத் திரைசூழ்ந்த
கானல்சங் கேறுங் கழுமல வூரிற் கவுணியன்
ஞானசம் பந்தனல மிகுபாட லிவை வல்லார்
வானசம் பந்தத் தவரொடு மன்னி வாழ்வாரே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—திரிபுடை. நடை—அன்னநடை. காலம்—மத்திமம்.

சுந்தரமூர்த்திநாயனார் [திருப்புக்கொளியூரவிநாசி] திருமுறை 7

திருச்சிற்றம்பலம்.

எற்றான் மறக்கே னெழுமைக்கு மெம்பெரு மானையே
உற்றாயென் றுன்னையே யுள்குகின்றே னுணர்ந் துள்ளத்தால்
புற்றா டரவா புக்கொளி யூரவி னாசியே
பற்றாக வாழ்வேன் பசுபதியே பர மேட்டியே.

உரைப்பா ருரையுகந் துள்கவல் லார்தங்க ளுச்சியாய்
அரைக்கா டரவா வாதியு மந்தமு மாயினாய்
புரைக்காடு சோலைப் புக்கொளி யூரவி னாசியே
கரைக்கான் முதலையைப் பிள்ளைத ரச்சொல்லு காலனையே.

நீரேற வேறு நிமிர்புன்சடை நின்மல மூர்த்தியைப்
போரேற தேறியைப் புக்கொளி யூரவி னாசியைக்
காரேறு கண்டனைத் தொண்டனா ரூரன் கருதிய
சீரேறு பாடல்கள் செப்பவல் லார்க்கில்லை துன்பமே.

திருச்சிற்றம்பலம்

தாளம்—திரிபுடை. நடை—மயில்நடை. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருவெங்குரு] திருமுறை 1

திருச்சிற்றம்பலம்.

காலைநன் மாமலர் கொண்டடி பரவிக்
    கைதொழு மாணியைக் கறுத்தவெங் காலன்
ஓலம திடமுன் னுயிரொடு மாள
    வுதைத்தவ னுமையவள் விருப்பனெம் பெருமான்
மாலைவந் தணுக வோதம்வந் துலவி
    மறிதிரை சங்கொடு பவளமு னுந்தி
வேலைவந் தணையுஞ் சோலைகள் சூழ்ந்த
    வெங்குரு மேவியுள் வீற்றிருந் தாரே.



விண்ணியல் விமானம் விரும்பிய பெருமான்
    வெங்குரு மேவியுள் வீற்றிருந் தாரை
நண்ணிய நூலன் ஞானசம் பந்த
    னவின்றவிவ் வாய்மொழி நலமிகு பத்தும்
பண்ணியல் பாகப் பத்திமை யாலே
    பாடியு மாடியும் பயிலவல் லோர்கள்
விண்ணவர் விமானங் கொடுவர வேறி
    வியனுல காண்டு வீற்றிருப் பவர்தாமே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—திரிபுடை. நடை—குக்குடநடை. காலம்—விளம்பம்.

திருநாவுக்கரசுநாயனார் [திருவாரூர்] திருமுறை 4

திருச்சிற்றம்பலம்.

முத்துவி தான மணிப்பொற் கவரி முறையாலே
பத்தர்க ளோடு பாவையர் சூழப் பலிப்பின்னே
வித்தகக் கோல வெண்டலை மாலை விரதிகள்
அத்த னாரூ ராதிரை நாளா லதுவண்ணம்.

பாரூர் பௌவத் தானைப் பத்தர் பணிந்தேத்தச்
சீரூர் பாட லாட லறாதசெம் மாப்பார்ந்
தோரூ ரொழியா துலக மெங்கு மெடுத்தேத்தும்
ஆரூ ரன்ற னாதிரை நாளா லதுவண்ணம்.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—திரிபுடை. நடை—அன்னநடை. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருவாரூர்] திருமுறை 1

திருச்சிற்றம்பலம்.

சித்தந் தெளிவீர்காள்
அத்த னாரூரைப்
பத்தி மலர்தூவ
முத்தி யாகுமே.

பிறவி யறுப்பீர்காள்
அறவ னாரூரை
மறவா தேத்துமின்
துறவி யாகுமே.

துன்பம் துடைப்பீர்காள்
அன்ப னணியாரூர்
நன்பொன் மலர்தூவ
இன்ப மாகுமே.

திருச்சிற்றம்பலம்.

12. பண்—வியாழக்குறிஞ்சி. இராகம்—சௌராட்டிரம் (கும்மிமெட்டு)

தாளம்—ரூபகம். நடை—பிடிநடை. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருப்புகலி] திருமுறை 1

திருச்சிற்றம்பலம்.

ஆட லரவசைத்தா னரு மாமறை தான்விரித்தான் கொன்றை
சூடிய செஞ்சடை யான் சுடுகா டமர்ந்த பிரான்
ஏடவிழ் மாமலையா ளொரு பாக மமர்ந்தடியா ரேத்த
ஆடிய வெம் மிறையூர் புகலிப் பதி யாமே.

வேதமோர் கீதமுணர் வாணர் தொழு தேத்த மிகுவாசப்
போதனைப் போர் மறையோர் பயிலும் புகலி தன்னுள்
நாதனை ஞானமிகு சம்பந்தன் றமிழ் மாலை நாவில்
ஓதவல் லாருலகி லுறு நோய் களை வாரே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—திரிபுடை. நடை—தவளைத்தத்து. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [பொது] திருமுறை 1

திருச்சிற்றம்பலம்.

அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லு மஃதறிவீர்
உய்வினை நாடா திருப்பது முந்தமக் கூனமன்றே
கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுது நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப் பெறுதிரு நீலகண்டம்.

பிறந்த பிறவியிற் பேணியெஞ் செல்வன் கழலடைவான்
இறந்த பிறவியுண் டாகி லிமையவர் கோனடிக்கண்
திறம்பயின் ஞானசம் பந்தன செந்தமிழ் பத்தும்வல்லார்
நிறைந்த வுலகினில் வானவர் கோனொடுங் கூடுவரே.

திருச்சிற்றம்பலம்.



தாளம்—ஆதி. நடை—மயில்நடை. காலம்—துரிதம்.

திருஞானசம்பந்தர் [திருக்கழுமலம்] திருமுறை 1

திருச்சிற்றம்பலம்.

பந்தத்தால் வந்தெப்பால் பயின்று நின்ற வும்பரப்
பாலே சேர்வா யேனோர்கான் பயில்கண முனிவர்களுஞ்
சிந்தித்தே வந்திப்பச் சிலம்பின் மங்கை தன்னொடுஞ்
சேர்வார் நாணு ணீள்கயிலைத் திகழ்தரு பரிசதெலாஞ்
சந்தித்தே யிந்தப்பார் சனங்க ணின்று தங்கணுற்
றாமே காணு வாழ்வாரத் தகவுசெய் தவனதிடங்
கந்தத்தா லெண்டிக்குங் கமழ்ந் திலங்கு சந்தனக்
காடார் பூவார் சீர்மேவுங் கழுமல வளநகரே.

கஞ்சத்தே னுண்டிட்டே களித்து வண்டு சண்பகக்
கானே தேனே போராருங் கழுமல நகரிறையைத்
தஞ்சைச்சார் சண்பைக்கோன் சமைத்த நற்க லைத்துறை
தாமே போல்வார் தேனேரார் தமிழ்விர கனமொழிகள்
எஞ்சத்தேய் வின்றிக்கே யிமைத்தி சைத்த மைத்தகொண்
டேழே யேழே நாலேமூன் றியலிசை யிசையியல்பா
வஞ்சத்தேய் வின்றிக்கே மனங் கொளப்ப யிற்றுவோர்
மார்பே சேர்வாள் வானோர்சீர் மதிநுதன் மடவரலே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஏகம் (சதுரஜாதி). நடை—அரவினோட்டம். காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [பிரமபுரம்] திருமுறை 1

திருச்சிற்றம்பலம்.

பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்.

கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை.

திருச்சிற்றம்பலம்.

13. பண்—பஞ்சமம். இராகம்—சௌராட்டிரம். சுவை—வீரம், அற்புதம்.
தாளம்—ரூபகம். நடை—அன்னநடை. காலம்—மத்திமம்.
திருஞானசம்பந்தர் [திருச்செங்காட்டங்குடி] திருமுறை 3

திருச்சிற்றம்பலம்.

பைங்கோட்டு மலர்ப்புன்னைப் பறவைகாள் பயப்பூரச்
சங்காட்டந் தவிர்த்தென்னைத் தவிராநோய் தந்தானே
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன் பணிசெய்ய
வெங்காட்டு ளனலேந்தி விளையாடும் பெருமானே.

செந்தண்பூம் புனல்பரந்த செங்காட்டங் குடிமேய
வெந்தநீ றணிமார்பன் சிறுத்தொண்ட னவன்வேண்ட
அந்தண்பூங் கலிக்காழி யடிகளையே யடிபரவும்
சந்தங்கொள் சம்பந்தன் றமிழுரைப்போர் தக்கோரே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ரூபகம். நடை—அன்னநடை. காலம்—மத்திமம்.
சுந்தரமூர்த்திநாயனார் [திருக்கயிலாயம்] திருமுறை 7

திருச்சிற்றம்பலம்.

தானெனை முன்படைத்தா னதறிந்துதன் பொன்னடிக்கே
நானென பாடலந்தோ நாயினேனைப் பொருட்படுத்து
வானெனை வந்தெதிர்கொள்ள மத்தயானை யருள்புரிந்து
ஊனுயிர் வேறுசெய்தா னொடித்தான்மலை யுத்தமனே.

ஊழிதொ றூழிமுற்று முயர்பொன்னொடித் தான்மலையைச்
சூழிசை யின்கரும்பின் சுவைநாவல வூரன்சொன்ன
ஏழிசை யின்றமிழா லிசைந்தேத்திய பத்தினையும்
ஆழிகட லரையா வஞ்சையப்பர்க் கறிவிப்பதே.

திருச்சிற்றம்பலம்.

14. பண்—புறநீர்மை. இராகம்—பூவாளம்.
தாளம்—ஆதி. நடை—அன்னநடை. காலம்—மத்திமம்.
திருஞானசம்பந்தர் [திருவாலவாய்] திருமுறை 3

திருச்சிற்றம்பலம்.

மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைமட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாடொறும் பரவப்



பொங்கழ லுருவன் பூதநா யகனால்
வேதமும் பொருள்களு மருளி
அங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த
வாலவா யாவது மிதுவே.

பன்னலம் புணரும் பாண்டிமா தேவி
குலச்சிறை யெனுமிவர் பணியும்
அந்நலம் பெறுசீ ராலவா யீசன்
திருவடி யாங்கவை போற்றிக்
கன்னலம் பெரிய காழியுண் ஞான
சம்பந்தன் செந்தமி ழிவைகொண்
டின்னலம் பாட வல்லவ ரிமையோ
ரேத்த வீற்றிருப் பவரினி தே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—திரிபுடை. நடை—அன்னநடை. காலம்—மத்திமம்.
திருஞானசம்பந்தர் [திருக்கோணமாமலை] திருமுறை 3

திருச்சிற்றம்பலம்.

நிரைகழ லரவஞ் சிலம்பொலி யலம்பு
நிமலர்நீ றணிதிரு மேனி
வரைகெழு மகளோர் பாகமாப் புணர்ந்த
வடிவினர் கொடியணி விடையர்
கரைகெழு சந்துங் காரகிற் பிளவு
மளப்பருங் கனமணி வரன்றிக்
குரைகட லோத நித்திலங் கொழிக்குங்
கோணமா மலையமர்ந் தாரே.

குற்றமில் லாதார் குரைகடல் சூழ்ந்த
கோணமா மலையமர்ந் தாரைக்
கற்றுணர் கேள்விக் காழியர் பெருமான்
கருத்துடை ஞானசம் பந்தன்
உற்றசெந் தமிழார் மாலையீ ரைந்து
முரைப்பவர் கேட்பவ ருயர்ந்தோர்
சுற்றமு மாகித் தொல்வினை யடையார்
தோன்றுவர் வானிடைப் பொலிந்தே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஆதி. நடை—குக்குடநடை. காலம்—மத்திமம்.
சுந்தரமூர்த்திநாயனர் [திருவாரூர்] திருமுறை 7

திருச்சிற்றம்பலம்.

நல்ல நினைப் பொழிய நாள்களி லாருயி ரைக்
கொல்ல நினைப் பனவுங் குற்றமு மற்றொழி யச்
செல்வ வயற் கழனித் தென்றிரு வாரூர் புக்
கெல்லை மிதித் தடியே னென்றுகொ லெய்துவ தே.

திருச்சிற்றம்பலம்.

15. பண்—பழம்பஞ்சுரம். இராகம்—சங்கராபரணம்.
தாளம்—ஆதி. நடை—குக்குடநடை. காலம்—மத்திமம்.
சுந்தரமூர்த்திநாயனர் [திருப்பாண்டிக்கொடுமுடி] திருமுறை 7

திருச்சிற்றம்பலம்.

மற்றுப் பற்றெனக் கின்றி நின்றிருப்
பாதமே மனம் பாவித்தேன்
பெற்றலும் பிறந் தேனினிப் பிற
வாத தன்மைவந் தெய்தினேன்
கற்றவர் தொழு தேத்துஞ் சீர்க்கறை
யூரிற் பாண்டிக் கொடுமுடி
நற்றவா வுனை நான்மறக் கினுஞ்
சொல்லுநா நமச்சி வாயவே.

எல்லையில் புக ழெம்பிரா னெந்தை
தம்பிரா னெம்பொன் மாமணி
கல்லையுந் திவ ளம்பொழிந் திழி
காவிரி யதன் வாய்க்கரை
நல்லவர் தொழு தேத்துஞ் சீர்க்கறை
யூரிற் பாண்டிக் கொடுமுடி
வல்லவா வுன்னை நான்மறக் கினுஞ்
சொல்லுநா நமச்சி வாயவே.

கோணிய பிறை சூடியைக் கறை
யூரிற் பாண்டிக் கொடுமுடி
பேணிய பெரு மானைப்பிஞ் ஞகப்
பித்தனைப் பிறப் பில்லியை



பாணுலா வரி வண்டறை கொன்றைத்
தாரனைப் படப் பாம்பரை
நாணனைத் தொண்ட னூரன்சொல் லிவை
சொல்லுவார்க் கில்லைத் துன்பமே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஆதி. நடை—குக்குடநடை. காலம்—மத்திமம்
சுந்தரமூர்த்திநாயனர் [திருவாரூர்] திருமுறை 7

திருச்சிற்றம்பலம்.

பத்திமையு மடிமையையுங் கைவிடுவான் பாவியேன்
பொத்தினநோ யதுவிதனைப் பொருளறிந்தேன் போய்த்தொ
ழுவேன்
முத்தினைமா மணிதன்னை வயிரத்தை மூர்க்கனேன்
எத்தனைநாட் பிரிந்திருக்கே னென்னாரு ரிறைவனையே.

பேரூரு மதகரியி னுரியானைப் பெரியவர்தம்
சீரூருந் திருவாரூர்ச் சிவனடியே திறம்விரும்பி
ஆரூர னடித்தொண்ட னடியன்சொல் லகலிடத்தில்
ஊரூர னிவைவல்லா ருலகவர்க்கு மேலாரே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஆதி. நடை—ஆற்றொழுக்கு. காலம்—மத்திமம்.
திருஞானசம்பந்தர் [திருப்பிரமபுரம்] திருமுறை 3

திருச்சிற்றம்பலம்.

உற்றுமை சேர்வது மெய்யினையே
யுணர்வது நின்னருண் மெய்யினையே
கற்றவர் காய்வது காமனையே
கனல்விழி காய்வது காமனையே
அற்ற மறைப்பது முன்பணியே
யமரர்கள் செய்வது முன்பணியே
பெற்று முகந்தது கந்தனையே
பிரம புரத்தையு கந்தனையே.

பருமதின் மதுரைமன் னவையெதிரே
பதிகம தெழுதிலை யவையெதிரே
வருநதி யிடைமிசை வருகரனே
வசையொடு மலர்கெட வருகரனே
கருதலி லிசைமுர றருமருளே
கழுமல மமரிறை தருமருளே
மருவிய தமிழ்விர கனமொழியே
வல்லவர் தம்மிடர் திடமொழியே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ரூபகம். நடை—பிடிநடை. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருப்பல்லவனீச்சரம்] திருமுறை 3

திருச்சிற்றம்பலம்.

பரசு பாணியர் பாடல் வீணையர்
பட்டி னத்துறை பல்லவ னீச்சரத்
தரசு பேணி நின்று ரிவர்
தன்மை யறிவா ரார்.

பட்ட நெற்றியர் நட்ட மாடுவர்
பட்டினத்துறை பல்லவ னீச்சரத்
திட்ட மாயிருப் பாரிவர்
தன்மை யறிவா ரார்.

வான மாள்வதற் கூன மொன்றிலை
மாதர் பல்லவ னீச்சரத் தானை
ஞான சம்பந்த னற்றமிழ் சொல்ல
வல்லவர் நல்லவ ரே.

திருச்சிற்றம்பலம்

16. பண்—பழந்தக்கராகம் இராகம்—ஆரபி.

தாளம்—ஆதி. நடை—இடபநடை. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருநள்ளாறு] திருமுறை 1

திருச்சிற்றம்பலம்.

போகமார்த்த பூண்முலையா டன்னோடும் பொன்னகலம்
பாகமார்த்த பைங்கண்வெள் ளேற்றண்ணல் பரமேட்டி
ஆகமார்த்த தோலுடையன் கோவண வாடையின்மேல்
நாகமார்த்த நம்பெருமான் மேயது நள்ளாறே.



தண்புனலும் வெண்பிறையுந் தாங்கிய தாழ்சடையன்
நண்புநல்லார் மல்குகாழி ஞானசம் பந்தனல்ல
பண்புநள்ளா றேத்துபாடல் பத்து மிவைவல்லார்
உண்புநீங்கி வானவரோ டுலகி லுறைவாரே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஆதி. நடை—இடபநடை. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருநெடுங்களம்] திருமுறை 1

திருச்சிற்றம்பலம்.

மறையுடையாய் தோலுடையாய் வார்சடைமேல் வளரும்
பிறையுடையாய் பிஞ்ஞகனே யென்றுனைப் பேசினல்லால்
குறையுடையார் குற்றமோராய் கொள்கையினா லுயர்ந்த
நிறையுடையா ரிடர்களையாய் நெடுங்கள மேயவனே.

நீடவல்ல வார்சடையான் மேயநெடுங் களத்தைச்
சேடர்வாழு மாமறுகிற் சிரபுரக்கோ னலத்தால்
நாடவல்ல பனுவன்மாலை ஞானசம் பந்தன்சொன்ன
பாடல்பத்தும் பாடவல்லார் பாவம் பறையுமே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஆதி. நடை—இடபநடை. காலம்—மத்திமம்.

சுந்தரமூர்த்திநாயனூர் [திருத்தோணிபுரம்] திருமுறை 7

திருச்சிற்றம்பலம்.

வண்டரங்கப் புனற்கமல மதுமாந்திப் பெடையினொடும்
ஒண்டரங்க விசைபாடு மளியரசே யொளிமதியத்
துண்டரங்கப் பூண்மார்பர் திருத்தோணி புரத்துறையும்
பண்டரங்கர்க் கென்னிலைமை பரிந்தொருகாற் பகராயே.

போர்மிகுத்த வயற்றேணி புரத்துறையும் புரிசடையெங்
கார்மிகுத்த கறைக்கண்டத் திறையவனை வண்கமலத்
தார்மிகுத்த வரைமார்பன் சம்பந்த னுரைசெய்த
சீர்மிகுத்த தமிழ்வல்லார் சிவலோகஞ் சேர்வாரே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஆதி. நடை—இடபநடை. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருச்செங்காட்டங்குடி] திருமுறை 1

திருச்சிற்றம்பலம்.

நறைகொண்ட மலர்தூவி விரையளிப்ப நாடோறும்
முறைகொண்டு நின்றடியார் முட்டாமே பணிசெய்யச்
சிறைகொண்ட வண்டறையுஞ் செங்காட்டங் குடியதனுள்
கறைகொண்ட கண்டத்தான் கணபதீச் சரத்தானே.

கறையிலங்கு மலர்க்குவளை கண்காட்டக் கடிபொழிலின்
நறையிலங்கு வயற்காழித் தமிழ்ஞான சம்பந்தன்
சிறையிலங்கு புனற்படைப்பைச் செங்காட்டங் குடிசேர்த்தும்
மறையிலங்கு தமிழ்வல்லார் வானுலகத் திருப்பாரே

திருச்சிற்றம்பலம்.

தாளம்—திரிபுடை. நடை—இடபநடை. காலம்—மத்திமம்.

திருநாவுக்கரசுநாயனார் [திருப்பழனம்] திருமுறை 4

திருச்சிற்றம்பலம்.

சொன்மாலை பயில்கின்ற குயிலினங்காள் சொல்லீரே
பன்மாலை வரிவண்டு பண்மிழற்றும் பழனத்தான்
முன்மாலை நகுதிங்கண் முகிழ்விளங்கு முடிச்சென்னிப்
பொன்மாலை மார்பனென் புதுநலமுண் டிகழ்வானோ

மனைக்காஞ்சி யிளங்குருகே மறந்தாயோ மதமுகத்த
பனைக்கைம்மா வுரிபோர்த்தான் பலர்பாடும் பழனத்தான்
நினைக்கின்ற நினைப்பெல்லா முரையாயோ நிகழ்வண்டே
சுனைக்குவளை மலர்க்கண்ணாள் சொற்றூதாய்ச் சோர்வாளோ.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஆதி. நடை—இடபநடை. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருவலிவலம்] திருமுறை 1

திருச்சிற்றம்பலம்.

தாயுநீயே தந்தைநீயே சங்கரனே யடியேன்
ஆயுநின்பா லன்புசெய்வா னாதரிக்கின்ற துள்ளம்
ஆயமாய காயந்தன்னு ளைவர்நின் றொன்றலொட்டார்
மாயமேயென் றஞ்சுகின்றேன் வலிவல மேயவனே.

திருச்சிற்றம்பலம்.



17. பண்—காந்தாரபஞ்சமம். இராகம்—கேதாரகௌளம்.

தாளம்—திரிபுடை. நடை—பாற்றியக்கம். காலம்—மத்திமம்.

திருநாவுக்கரசுநாயனார் [பொது] திருமுறை 4

திருச்சிற்றம்பலம்.

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே.

பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கல மரனஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலங் கோட்ட மில்லது
நாவினுக் கருங்கல நமச்சி வாயவே.

இல்லக விளக்கது விருள் கெடுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே.

மாப்பிணை தழுவிய மாதோர் பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத்
தேத்தவல் லார்தமக் கிடுக்க ணில்லையே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஆதி. நடை—அன்னநடை. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [கோயில்] திருமுறை 3

திருச்சிற்றம்பலம்.

ஆடினாய்நறு நெய்யொடுபாறயி
ரந்தணர்பிரி யாதசிற்றம்பலம்
நாடினாயிடமா நறுங்கொன்றை நயந்தவனே
பாடினாய்மறை யோடுபல்கீதமும்
பல்சடைப்பனி கால்கதிர்வெண்டிங்கள்
சூடினாயரு ளாய்சுருங்கவெம தொல்வினையே.

நாறுபூம்பொழி நண்ணியகாழியு
ணான்மறைவல்ல ஞானசம்பந்தன்
ஊறுமின் றமிழா லுயர்ந் தாருறை தில்லை தன்னுள்
ஏறுதொல்புக ழேந்து சிற்றம்பலத்
தீசனை யிசையாற் சொன்ன பத்திவை
கூறுமாறுவல் லாருயர்ந்தா ரொடுங்கூடுவரே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—திரிபுடைவிஷமம். நடை—பாற்றியக்கம். காலம்—மத்திமம்.
திருஞானசம்பந்தர் [பொது] திருமுறை 3

திருச்சிற்றம்பலம்.

✓✓ துஞ்சலுந் துஞ்சலி லாத போழ்தினும்
நெஞ்சக நைந்து நினைமி னாடொறும்
வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற்
றஞ்சவு தைத்தன வஞ்செ ழுத்துமே.

தும்ம லிரும றொடர்ந்த போழ்தினும்
வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்
இம்மை வினையடர்த் தெய்தும் போழ்தினும்
அம்மை யினுந்துணை அஞ்செ ழுத்துமே.

நற்றமிழ் ஞானசம் பந்த னான்மறை
கற்றவன் காழியர் மன்ன னுன்னிய
அற்றமின் மாலையி ரைந்து மஞ்செழுத்
துற்றன வல்லவ ரும்ப ராவரே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஆதி. நடை—ஆற்றொழுக்கு. காலம்—மத்திமம்.
சுந்தரமூர்த்திநாயனார் [திருவையாறு] திருமுறை 7

திருச்சிற்றம்பலம்

பரவும் பரிசொன் றறியேனான்
பண்டே யும்மைப் பயிலாதேன்
இரவும் பகலு நினைந்தாலு
மெய்த நினைய மாட்டேனான்



கரவி லருவி கமுகுண்ணத்
தெங்கங் குலைக்கீழ்க் கருப்பாலை
அரவந் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய வடிகளோ.

கூடி யடியா ரிருந்தாலுங்
குணமொன் றில்லீர் குறிப்பிலீர்
ஊடி யிருந்து முணர்கிலே
னும்மைத் தொண்ட னூரனேன்
தேடி யெங்குங் காண்கிலேன்
றிருவா ரூரே சிந்திப்பன்
ஆடுந் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய வடிகளோ.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—திரிபுடை. நடை—குக்குடநடை. காலம்—மத்திமம்.
திருஞானசம்பந்தர் [திருவாவடுதுறை] திருமுறை 3

திருச்சிற்றம்பலம்.

இடரினுந் தளரினு மெனதுறுநோய்
தொடரினு முனகழ றொழுதெழுவேன்
கடறனி லமுதொடு கலந்தநஞ்சை
மிடறினி லடக்கிய வேதியனே
இதுவோவெமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின் னருளாவடுதுறை யரனே.

நனவினுங் கனவினு நம்பாவுன்னை
மனவினும் வழிபடன் மறவேனம்மான்
புனல்விரி நறுங்கொன்றைப் போதணிந்த
கனலெரி யனல்புல்கு கையவனே
இதுவோவெமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின் னருளாவடுதுறை யரனே.

திருச்சிற்றம்பலம்.

18. பண்—சாதாரி. இராகம்—பந்துவராளி. சுவை—வீரம்.
தாளம்—ஜம்பை. நடை—அன்னநடை. காலம்—மத்திமம்.
திருஞானசம்பந்தர் [திருநெல்வேலி] திருமுறை 3

திருச்சிற்றம்பலம்.

மருந்தவை மந்திர மறுமைநன் னெறியவை
மற்றுமெல்லாம்
அருந்துயர் கெடுமவர் நாமமே சிந்தைசெய்
நன்னெஞ்சமே
பொருந்துதண் புறவினிற் கொன்றைபொன் சொரிதரத்
துன்றுபைம்பூஞ்
செருந்திசெம் பொன்மலர் திருநெல்வேலி யுறை
செல்வர்தாமே.

பெருந்தண்மா மலர்மிசை யயனவ னனையவர்
பேணுகல்வித்
திருந்துமா மறையவர் திருநெல்வேலி யுறை
செல்வர்தம்மைப்
பொருந்துநீர்த் தடமல்கு புகலியுண் ஞானசம்
பந்தன்சொன்ன
அருந்தமிழ் மாலைகள் பாடியா டக்கெடு
மருவினையே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ரூபகம். நடை—இடபநடை. காலம்—மத்திமம்.
திருநாவுக்கரசுநாயனார் [திருவங்கமாலை] திருமுறை 4

திருச்சிற்றம்பலம்.

தலையே நீவணங்காய்—தலை
மாலை தலைக் கணிந்து
தலையா லேபலி தேருந் தலைவனைத்
தலையே நீ வணங்காய்.

தேடிக் கண்டுகொண்டேன்—திரு
மாலொடு நான் முகனும்
தேடித் தேடொணாத் தேவனை யென்னுளே
தேடிக் கண்டு கொண்டேன்,

திருச்சிற்றம்பலம்.



19. பண்—நர்த்தராகம் (நட்டராகம்). இராகம்—பந்துவராளி.
சுவை—இன்பச்சுவை.
தாளம்—ஆதி. நடை—பிடிநடை. காலம்—மத்திமம்.
திருஞானசம்பந்தர் [திருக்கேதீச்சரம்] திருமுறை 2

திருச்சிற்றம்பலம்.

விருது குன்ற மாமேரு
வினாணா வாவன லெரியம்பாய்
பொருது மூவெயில் செற்றவன்
பற்றிநின் றுறைபதி யெந்நாளும்
கருதுகின்ற வூர்கனை கடற்
கடிகமழ் பொழிலணி மாதோட்டம்
கருத நின்ற கேதீச்சரங்
கைதொழக் கடுவினை யடையாவே.

மாடெ லாமண முரசெனக்
கடலின தொலிகவர் மாதோட்டத்
தாட லேறுடை யண்ணல்கே
தீச்சரத் தடிகளை யணிகாழி
நாடு ளார்க்கிறை ஞானசம்
பந்தன்சொ னவின்றெழு பாமாலைப்
பாட லாயின பாடுமின்
பத்தர்கள் பரகதி பெறலாமே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ரூபகம். நடை—அன்னநடை. காலம்—மத்திமம்.
சுந்தரமூர்த்திநாயனார் [திருமழபாடி] திருமுறை 7

திருச்சிற்றம்பலம்.

பொன்னார் மேனியனே புலித்தோலை யரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேன் மிளிர்கொன்றை யணிந்தவனே
மன்னே மாமணியே மழபாடியுண் மாணிக்கமே
அன்னே யுன்னையல்லா லினியாரை நினைக்கேனே.

ஏரார் மூப்புரமு மெரியச்சிலை தொட்டவனை
வாரார் கொங்கையுடன் மழபாடியுண் மேயவனைச்
சீரார் நாவலர்கோ னாரூர னுரைத்ததமிழ்
பாரோ ரேத்தவல்லார் பரலோகத் திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஆதி.. நடை—அன்னநடை. காலம்—மத்திமம்.

சுந்தரமூர்த்திநாயனார் [திருக்காளத்தி] திருமுறை 7

திருச்சிற்றம்பலம்.

மறிசேர் கையினனே மதமாவுரி போர்த்தவனே
குறியே யென்னுடைய குருவேயுன்குற் றேவல்செய்வேன்
நெறியே நின்றடியார் நினைக்குந்திருக் காளத்தியுள்
அறிவே யுன்னையல்லா லறிந்தேத்த மாட்டேனே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஆதி. நடை—பிடிநடை. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருவலஞ்சுழி] திருமுறை 2

திருச்சிற்றம்பலம்.

என்ன புண்ணியஞ் செய்தனை
நெஞ்சமே யிருங்கடல் வையத்து
முன்ன நீபுரி நல்வினைப்
பயனிடை முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரி சூழ்திரு
வலஞ்சுழி வாணனை வாயாரப்
பண்ணி யாதரித் தேத்தியும்
பாடியும் வழிபடு மதனாலே.

மாதொர் கூறனை வலஞ்சுழி
மருவிய மருந்தினை வயற்காழி
நாதன் வேதியன் ஞானசம்பந்தன்
வாய் நவிற்றிய தமிழ்மாலை
ஆதரித் திசை கற்றுவல்லார்
சொலக்கேட் டுகந்தவர் தம்மை
வாதியா வினை மறுமைக்கு
மிம்மைக்கும் வருத்தம்வந் தடையாவே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ரூபகம். நடை—அன்னநடை. காலம்—மத்திமம்.

சுந்தரமூர்த்திநாயனார் [திருக்கோளிலி] திருமுறை 7

திருச்சிற்றம்பலம்.

நீள நினைந்தடியே னுமை நித்தலுங் கைதொழுவேன்
வாளன கண்மடவா ளவள் வாடி வருந்தாமே
கோளிலியெம்பெருமான் குண்டையூர்ச்சிலநெல்லுப்பெற்றேன்
ஆளிலை யெம்பெருமா னவை யட்டித்தரப் பணியே.



கொல்லை வளம்புறவிற் றிருக் கோளிலி மேயவனை
நல்லவர் தாம்பரவுந் திரு நாவல னூரனவன்
நெல்லிட வாட்கள்வேண்டி நினைந் தேத்திய பத்தும்வல்லார்
அல்லல் களைந்துலகி னண்டர் வானுல காள்பவரே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ரூபகம். நடை—அன்னநடை. காலம்—மத்திமம்.

சுந்தரமூர்த்திநாயனார் [திருக்குருகாவூர்] திருமுறை 7

திருச்சிற்றம்பலம்.

இத்தனையா மாற்றை யறிந்திலே னெம்பெருமான்
பித்தரே யென்றும்மைப் பேசுவார் பிறரெல்லாம்
முத்தினை மணிதன்னை மாணிக்க முளைத்தெழுந்த
வித்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே.

பாடுவார் பசிதீர்ப்பாய் பரவுவார் பிணிகளைவாய்
ஓடுநன் கலனாக வுண்பலிக் குழல்வானே
காடுநின் னிடமாகக் கடுவிரு ணடமாடும்
வேடனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஏகம். நடை—இடபநடை. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருவீரட்டானம்] திருமுறை 3

திருச்சிற்றம்பலம்.

படைகொள் கூற்றம் வந்துமெய்ப் பாசம் விட்ட போதின்கண்
இடைகொள் வாரெ மக்கிலை யெழுக போது நெஞ்சமே
குடைகொள் வேந்தன் மூதாதை குழகன் கோவ லூர்தனுள்
விடைய தேறுங் கொடியினான் வீரட் டானஞ் சேர்துமே.

கழியொ டுலவு கானல்சூழ் காழி ஞான சம்பந்தன்
பழிக டரச் சொன்னசொற் பாவ நாச மாதலால்
அழிவி லீர்கொண் டேத்துமின் னந்தண் கோவ லூர்தனுள்
விழிகொள் பூதப் படையினான் வீரட் டானஞ் சேர்துமே.

திருச்சிற்றம்பலம்.

20. பண்—மேகராகக்குறிஞ்சி. இராகம்—நீலாம்புரி.
தாளம்—திரிபுடை. நடை—பிடி நடை. காலம்—மத்திமம்.
திருஞானசம்பந்தர் [திருவையாறு] திருமுறை 1

திருச்சிற்றம்பலம்.

புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
யறிவழிந்திட் டைம்மே லுந்தி
அலமந்த போதாக வஞ்சேலென்
றருள்செய்வா னமருங் கோயில்
வலம்வந்த மடவார்க ணடமாட
முழவதிர மழையென் றஞ்சிச்
சிலமந்தி யலமந்து மரமேறி
முகில்பார்க்குந் திருவை யாறே.

அன்னமலி பொழில்புடைசூ ழையாற்றெம்
பெருமானை அந்தண் காழி
மன்னியசீர் மறைநாவன் வளர்ஞான
சம்பந்தன் மருவு பாடல்
இன்னிசையா லிவைபத்து மிசையுங்கா
லீசனடி யேத்து வார்கள்
தன்னிசையோ டமருலகிற் றவநெறிசென்
றெய்துவார் தாழா தன்றே.

திருச்சிற்றம்பலம்

தாளம்—திரிபுடை. நடை—பிடி நடை. காலம்—மத்திமம்.
திருஞானசம்பந்தர் [திருவீழிமிழலை] திருமுறை 1

திருச்சிற்றம்பலம்.

ஏரிசையும் வடவாலின் கீழிருந்தங்
கீரிருவர்க் கிரங்கி நின்று
நேரியநான் மறைப்பொருளை யுரைத்தொளிசேர்
நெறியளித்தோ னின்ற கோயில்
பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும்
பயின்றோது மோசை கேட்டு
வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள்
பொருட்சொல்லு மிழலை யாமே.



உரைசேரு மெண்பத்து நான்குநா
றாயிரமாம் யோனி பேத
நிரைசேரப் படைத்தவற்றி னுயிர்க்குயிரா
யங்கங்கே நின்றான் கோயில்
வரைசேரு முகின்முழவ மயில்கள்பல
நடமாட வண்டு பாட
விரைசேர்பொன் னிதழிதர மென்காந்தள்
கையேற்கு மிழலை யாமே.

மின்னியலு மணிமாட மிடைவீழி
மிழலையான் விரையார் பாதம்
சென்னிமிசைக் கொண்டொழுகுஞ் சிரபுரக்கோன்
செழுமறைகள் பயிலு நாவன்
பன்னியசீர் மிகுஞான சம்பந்தன்
பரிந்துரைத்த பத்து மேத்தி
இன்னிசையாற் பாடவல்லா ரிருநிலத்தி
லீசனெனு மியல்பி னோரே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—ஆதி. நடை—குக்குட நடை. காலம்—விளம்பம்.
திருஞானசம்பந்தர் [திருப்பராய்த்துறை] திருமுறை 1

திருச்சிற்றம்பலம்.

நீறு சேர்வதொர் மேனியர் நேரிழை
கூறு சேர்வதொர் கோலமாய்ப்
பாறு சேர்தலைக் கையர் பராய்த்துறை
ஆறு சேர்சடை யண்ணலே.

செல்வ மல்கிய செல்வர் பராய்த்துறைச்
செல்வர் மேற்சிதை யாதன
செல்வன் ஞானசம் பந்தன செந்தமிழ்
செல்வ மாமிவை செப்பவே.

திருச்சிற்றம்பலம்.

21. பண்—செந்துருத்தி. இராகம்—மத்திமாவதி.
தாளம்—ஆதி. நடை—குக்குட நடை. காலம்—மத்திமம்.
சுந்தரமூர்த்திநாயனுர் [திருவாரூர்] திருமுறை 7

திருச்சிற்றம்பலம்.

மீளா வடிமை யுமக்கே யாளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போ லுள்ளே கனன்று முகத்தான் மிகவாடி
ஆளா யிருக்கு மடியார் தங்க ளல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே.

விற்றுக் கொள்வீ ரொற்றி யல்லேன் விரும்பி யாட்பட்டேன்
குற்ற மொன்றுஞ் செய்த தில்லை கொத்தை யாக்கினீர்
எற்றுக் கடிகே ளென்கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர்
மற்றைக் கண்டான் றூரா தொழிந்தால் வாழ்ந்து போதீரே.

காரூர் கண்டத் தெண்டோள் முக்கண் கலைகள் பலவாகி
ஆரூர்த் திருமூ லட்டா னத்தே யடிப்பே ராரூரன்
பாரூ ரறிய வென்கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர்
வாரூர் முலையாள் பாகங் கொண்டீர் வாழ்ந்து போதீரே.

திருச்சிற்றம்பலம்.

22. பண்—அந்தாளிக்குறிஞ்சி. இராகம்—பிலகிரி (சாமா).
தாளம்—ஆதி. நடை—குக்குட நடை. காலம்—மத்திமம்.
திருஞானசம்பந்தர் [திருநல்லூர்ப்பெருமணம்] திருமுறை 3

திருச்சிற்றம்பலம்

கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில
சொல்லூர்ப் பெருமணஞ் சூடலரே தொண்டர்
நல்லூர்ப் பெருமண மேயநம் பானே.

நறும்பொழிற் காழியுண் ஞானசம் பந்தன்
பெறும்பத நல்லூர்ப் பெருமணத் தானை
உறும்பொரு ளாற்சொன்ன வொண்டமிழ் வல்லார்க்
கறும்பழி பாவ மவல மிலரே.

திருச்சிற்றம்பலம்.



பண்—யாழ்முரி. இராகம்—அடாணு.
தாளம்—திரிபுடை. நடை—அன்ன நடை. காலம்—மத்திமம்.
திருஞானசம்பந்தர் [திருத்தருமபுரம்] திருமுறை 1.

திருச்சிற்றம்பலம்.

மாதர்ம டப்பிடியும் மட வன்னமு மன்னதோர்
நடையு டைம் மலை மக டுணையென மகிழ்வர்
பூதவி னப்படைநின் றிசை பாடவு மாடுவ
ரவர் படர் சடைந் நெடு முடியதொர் புனலர்
வேதமோ டேழிசைபா டுவ ராழ்கடல் வெண்டிரை
யிரைந் நுரை கரை பொரு துவிம்மிநின் றயலே
தாதவிழ் புன்னைதயங் குமலர்ச்சிறை வண்டறை
யெழில் பொழில் குயில் பயி றருமபு ரம்பதியே.

திருச்சிற்றம்பலம்.

23. பண்—செவ்வழி. இராகம்—ஏதுகுலகாம்பூதி.
தாளம்—திரிபுடை. நடை—மயில் நடை. காலம்—மத்திமம்.
திருஞானசம்பந்தர் [திரீக்கேதாரம்] திருமுறை 2.

திருச்சிற்றம்பலம்.

தொண்டரஞ்சு களிறு மடக்கிச் சுரும்பார்மலர்
இண்டைகட்டி வழிபாடு செய்யுமிட மென்பரால்
வண்டுபாட மயிலால மான்கன்று துள்ளவரிக்
கெண்டைபாயச் சுனைநீல மொட்டலருங் கேதாரமே.

பாதம்விண்ணோர் பலரும் பரவிப்பணிந் தேத்தவே
வேதநான்கும் பதினெட்டொ டாறும் விரித்தார்க்கிடம்
தாதுவிண்ட மதுவுண்டு மிண்டிவரு வண்டினம்
கீதம்பாட மடமந்தி கேட்டுகளுங் கேதாரமே.

வாய்ந்தசெந் நெல்விளை கழனிமல்கும் வயற்காழியான்
ஏய்ந்தநீர்க் கோட்டிமையோ ருறைகின்ற கேதாரத்தை
ஆய்ந்துசொன்ன வருந்தமிழ்கள் பத்தும் மிசைவல்லவர்
வேந்தராகி யுலகாண்டு வீடுகதி பெறுவரே.

திருச்சிற்றம்பலம்.

தாளம்—திரிபுடை. நடை—மயில்நடை. காலம்—மத்திமம்.

திருஞானசம்பந்தர் [திருநாகைக்காரோணம்] திருமுறை 2

திருச்சிற்றம்பலம்.

கூனற் றிங்கட் குறுங்கண்ணி கான்றந் நெடு வெண்ணிலா
ஏனற் பூத்தம் மராங் கோதை யோடும் விராவுஞ்சடை
வான நாடன் னமரர் பெருமாற் கிட மாவது
கானல் வேலி கழி சூழ் கடனாகைக் காரோணமே.

மல்குதண் பூம்புனல் வாயந் தொழுகும் வயற் காழியான்
நல்ல கேள்வித் தமிழ்ஞான சம்பந்த னல்லார் கண்முன்
வல்ல வாறே புனைந் தேத்துங் காரோணத்து வண்டமிழ்
சொல்லு வார்க்கும் மிவை கேட்ப வர்க்குந் துயரில்லையே.

திருச்சிற்றம்பலம்.

24. பண்—திருக்குறுந்தொகை. இராகம்—நாதநாமக்கிரியை.
தாளம்—ஆதி.

திருநாவுக்கரசுநாயனார் திருமுறை 5.

திருச்சிற்றம்பலம்.

மாசில் வீணையு மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈச னெந்தை யிணையடி நீழலே.

விறகிற் றீயினன் பாலிற்படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோனட்டு உணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே.

பனைக்கை மும்மத வேழ முரித்தவன்
நினைப்ப வர்மனங் கோயிலாக் கொண்டவன்
அனைத்து வேடமா மம்பலக் கூத்தனைத்
தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனோ.

என்னி லாருமெ னக்கினி யாரில்லை
என்னி லும்மினி யானொரு வன்னுளன்
என்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னு ளேநிற்கு மின்னம்ப ரீசனே.



கல்வி ஞேடெனைப் பூட்டி யமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்கவென் வாக்கினால்
நெல்லு நீள்வய னீலக் குடியரன்
நல்ல நாமந விற்றியுய்ந் தேனன்றே.

அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோவிப் பிறவியே.

நெஞ்ச மென்பதோர் நீள்கயந் தன்னுளே
வஞ்ச மென்பதோர் வான்சுழிப் பட்டுநான்
துஞ்சும் போழ்துநின் னாமத் திருவெழுத்
தஞ்சுந் தோன்றவ ருளுமை யாறரே.

அல்ல லென்செயு மருவினை யென்செயுந்
தொல்லை வல்வினைத் தொந்தந்தா னென்செயுந்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க்
கெல்லை யில்லதோ ரடிமைபூண் டேனுக்கே.

நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே.

மூக்கு வாய்செவி கண்ணுட லாகிவந்
தாக்கு மைவர்த மாப்பை யவிழ்த்தருள்
நோக்கு வானமை நோய்வினை வாராமே
காக்கு நாயகன் கச்சியே கம்பனே.

திருச்சிற்றம்பலம்.

## சூத்தாங்க தேவாரங்கள்

25. பண்—திருநேரிசை. இராகம்—நவரோஸ்.

திருநாவுக்கரசுநாயனார் திருமுறை 4

திருச்சிற்றம்பலம்.

ஓம்பினேன் கூட்டை வாளா
வுள்ளத்தோர் கொடுமை வைத்துக்
காம்பிலா மூழை போலக்
கருதிற்றே முகக்க மாட்டேன்
பாம்பின்வாய்த் தேரை போலப்
பலபல நினைக்கின் றேனே
ஓம்பிநீ யுய்யக் கொள்ளா
யொற்றியூ ருடைய கோவே.

வேதியா வேத கீதா
விண்ணவ ரண்ணா வென்றென்
றோதியே மலர்க டூவி
யொருங்கிநின் கழல்கள் காணப்
பாதியோர் பெண்ணை வைத்தாய்
படர்சடை மதியஞ் சூடும்
ஆதியே யால வாயி
லப்பனே யருள்செ யாயே.

மனைவிதாய் தந்தை மக்கண்
மற்றுள சுற்ற மென்னும்
வினையுளே விழுந் தழுந்தி
வேதனைக் கிடமா காதே
கனையுமா கடல்சூழ் நாகை
மன்னுகா ரோணத் தானை
நினையுமா வல்லீ ராகி
னுய்யலா நெஞ்சி னீரே.

விளக்கினார் பெற்ற வின்ப
மெழுக்கினாற் பதிற்றி யாகும்
துளக்கினன் மலர் தொடுத்தாற்
றூயவிண் ணேற லாகும்



விளக்கிட்டார் பேறு சொல்லின்
மெய்ஞ்ஞெறி ஞான மாகும்
அளப்பில கீதஞ் சொன்னார்க்
கடிகடா மருளு மாறே.

காயமே கோயி லாகக்
கடிமன மடிமை யாக
வாய்மையே தூய்மை யாக
மனமணி யிலிங்க மாக
நேயமே நெய்யும் பாலா
நிறையநீ ரமைய வாட்டிப்
பூசனை யீச னார்க்குப்
போற்றவிக் காட்டி னோமே.

திருச்சிற்றம்பலம்.

திருவிருத்தம். இராகம்—பைரவி.

திருநாவுக்கரசுநாயனார் திருமுறை 4

திருச்சிற்றம்பலம்.

குனித்த புருவமுங் கொவ்வைச்செவ் வாயிற்
குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போன் மேனியிற்
பால்வெண்ணீறும்
இனித்த முடைய வெடுத்தபொற் பாதமுங்
காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ தேயிந்த
மாநிலத்தே.

கருவுற்ற நாண்முத லாகவுன் பாதமே
காண்பதற்கு
உருகிற்றெ னுள்ளமு நானுங் கிடந்தலந்
தெய்த்தொழிந்தேன்
திருவொற்றி யூரா திருவால வாயா
திருவாரூரா
ஒருபற் றிலாமையுங் கண்டிரங் காய்கச்சி
யேகம்பனே.

நின்னையெப் போது நினையலொட் டாய்நீ
நினையப்புகில்
பின்னையப் போதே மறப்பித்துப் பேர்த்தொன்று
நாடுவித்தி
உன்னையெப் போது மறந்திட் டுனக்கினி
தாவிருக்கும்
என்னையொப் பாருள ரோசொல்லு வாழி
யிறையவனே.

கருவாய்க் கிடந்துன் கழலே நினையுங்
கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்ற னாமம் பயின்றே
னுனதருளால்
திருவாய்ப் பொலியச் சிவாய நமவென்று
நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீ பாதிரிப்
புலியூரானே.

ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாயுடன்
றோன்றினராய்
மூன்று யுலகம் படைத்துகந் தான்மனத்
துள்ளிருக்க
ஏன்று னிமையவர்க் கன்பன் றிருப்பா
திரிப்புலியூர்த்
தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி
யோங்களுக்கே.

முடிகொண்ட மத்தமு முக்கண்ணி னோக்கு
முறுவலிப்புந்
துடிகொண்ட கையுந் துதைந்தவெண் ணீறுஞ்
சுரிகுழலாள்
படிகொண்ட பாகமும் பாய்புலித் தோலுமென்
பாவிநெஞ்சிற்
குடிகொண்ட வாதில்லை யம்பலக் கூத்தன்
குரைகழலே.



படைக்கல மாகவுன் னாமத் தெழுத்தஞ்செ
னாவிற்கொண்டேன்
இடைக்கல மல்லே னெழுபிறப் பும்முனக்
காட்செய்கின்றேன்
துடைக்கினும் போகேன் றொழுது வணங்கித்
தூநீறணிந்துன்
அடைக்கலங் கண்டா யணிதில்லைச் சிற்றம்
பலத்தரனே.

சிவனெனு நாமந் தனக்கே யுடையசெம்
மேனியெம்மான்
அவனெனை யாட்கொண் டளித்திடு மாகி
லவன்றனையான்
பவனெனு நாமம் பிடித்துத் திரிந்துபன்
னாளழைத்தால்
இவனெனைப் பன்னா ளழைப்பொழி யானென்
றெதிர்ப்படுமே.

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி
யென்மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டுமிவ்
வையகத்தே
தொழுவார்க் கிரங்கி யிருந்தருள் செய்பா
திரிப்புலியூர்ச்
செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடை மேல்வைத்த
தீவண்ணனே.

திருச்சிற்றம்பலம்.

26. பண்—திருத்தாண்டகம். இராகம்—அரிகாம்போதி.

திருநாவுக்கரசுநாயனார் திருமுறை 6.

திருச்சிற்றம்பலம்.

எல்லா வுலகமு மானாய் நீயே
யேகம்ப மேவி யிருந்தாய் நீயே
நல்லாரை நன்மை யறிவாய் நீயே
ஞானச் சுடர்விளக்காய் நின்றாய் நீயே

பொல்லா வினைக ளறுப்பாய் நீயே
புகழ்ச்சே வடியென்மேல் வைத்தாய் நீயே
செல்வாய செல்வந் தருவாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ.

வானவன்காண் வானவர்க்கு மேலா னான்காண்
வடமொழியுந் தென்றமிழு மறைக ணான்கும்
ஆனவன்கா ணைந்து மாடி னான்கா
ணையன்காண் கையிலன லேந்தி யாடும்
கானவன்காண் கானவனுக் கருள்செய் தான்காண்
கருதுவா ரிதயத்துக் கமலத் தூறும்
தேனவன்காண் சென்றடையாச் செல்வன் றான்காண்
சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் றானே.

தூண்டு சுடரனைய சோதி கண்டாய்
தொல்லமரர் சூளா மணிதான் கண்டாய்
காண்டற் கரிய கடவுள் கண்டாய்
கருதுவார்க் காற்ற வெளியான் கண்டாய்
வேண்டுவார் வேண்டுவதே யீவான் கண்டாய்
மெய்ந்நெறி கண்டாய் விரத மெல்லாம்
மாண்ட மனத்தார் மனத்தான் கண்டாய்
மறைக்காட் டுறையு மணாளன் றானே.

குருகாம் வயிரமாங் கூறு நாளாங்
கொள்ளுங் கிழமையாங் கோளே தானும்
பருகா வமுதமாம் பாலி னெய்யாம்
பழத்தி னிரதமாம் பாட்டிற் பண்ணும்
ஒருகா லுமையா ளோர்பா கனுமா
முண்ணின்ற நாவிற் குரை யாடியாம்
கருவா யுலகுக்கு முன்னே தோன்றுங்
கண்ணுங் கருகாவூ ரெந்தை தானே.

மனத்தகத்தான் றலைமேலான் வாக்கி னுள்ளான்
வாயாரத் தன்னடியே பாடுந் தொண்டர்
இனத்தகத்தா னிமையவர்தஞ் சிரத்தின் மேலா
னேழண்டத் தப்பாலா னிப்பாற் செம்பொன்



புனத்தகத்தார் நறுங்கொன்றைப் போதி னுள்ளான்
பொருப்பிடையா னெருப்பிடையான் காற்றி னுள்ளான்
கனத்தகத்தான் கயிலாயத் துச்சி யுள்ளான்
காளத்தி யானவனென் கண்ணு ளானே.

நற்பதத்தார் நற்பதமே ஞான மூர்த்தீ
நலஞ்சுடரே நால்வேதத் தப்பா னின்ற
சொற்பதத்தார் சொற்பதமுங் கடந்து நின்ற
சொலற்கரிய சூழலா யிதுவுன் றன்மை
நிற்பதொத்து நிலையிலா நெஞ்சந் தன்னு
ணிலாவாத புலாலுடம்பே புகுந்து நின்ற
கற்பகமே யானுன்னை விடுவே னல்லேன்
கனகமா மணிநிறத்தெங் கடவு ளானே.

பற்றிநின்ற பாவங்கள் பாற்ற வேண்டிற்
பரகதிக்குச் செல்வதொரு பரிசு வேண்டில்
சுற்றிநின்ற சூழ்வினைகள் வீழ்க்க வேண்டிற்
சொல்லுகேன் கேணெஞ்சே துஞ்சா வண்ணம்
உற்றவரு முறுதுணையு நீயே யென்று
முன்னையல்லா லொருதெய்வ முன்கே னென்றும்
புற்றரவர்க் கச்சார்த்த புனிதா வென்றும்
பொழிலாரூ ராவென்றே போற்று நில்லே.

உயிரா வணமிருந் துற்று நோக்கி
யுள்ளக் கிழியி னுரு வெழுதி
உயிரா வணஞ்செய்திட் டுன்கைத் தந்தா
லுணரப் படுவாரோ டொட்டி வாழ்தி
அயிரா வணமேறு தானே றேறி
யமரர்நா டாளாதே யாரூ ராண்ட
அயிரா வணமேயென் னம்மா னேநின்
னருட்கண்ணு னோக்காதா ரல்லா தாரே.

பாசத்தைப் பற்றறுக்க லாகு நெஞ்சே
பரஞ்சோதீ பண்டரங்கா பாவ நாசா
தேசத் தொளிவிளக்கே தேவ தேவே
திருவாரூர்த் திருமூலட் டானா வென்று

நேசத்தை நீபெருக்கி நேர்நின் றுள்கி
நித்தலுஞ் சென்றடிமேல் வீழ்ந்து நின்று
ஏசற்று நின்றிமையோ ரேறே யென்று
மெம்பெருமா னென்றென்றே யேத்தா நில்லே.

முன்ன மவனுடைய நாமங் கேட்டாண்
மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னை யவனுடைய வாரூர் கேட்டாள்
பெயர்த்து மவனுக்கே பிச்சி யானாள்
அன்னையையு மத்தனையு மன்றே நீத்தா
ளகன்றா ளகலிடத்தா ராசா ரத்தைத்
தன்னை மறந்தா டன்னாமங் கெட்டா
டலைப்பட்டா ணங்கை தலைவன் றாளே.

பாரார் பரவும் பழனத் தானைப்
பருப்பதத் தானைப் பைஞ்ஞீலி யானைச்
சீரார் செழும்பவளக் குன்றொப் பானைத்
திகழுந் திருமுடிமேற் றிங்கள் சூடிப்
பேரா யிரமுடைய பெம்மான் றன்னைப்
பிறர்தன்னைக் காட்சிக் கரியான் றன்னைக்
காரார் கடல்புடைசூ ழந்த ணாகைக்
காரோணத் தெஞ்ஞான்றுங் காண லாமே.

அடைந்தார்தம் பாவங்க ளல்ல னோய்க
ளருவினைக ணல்குரவு செல்லா வண்ணம்
கடிந்தானைக் கார்முகில்போற் கண்டத் தானைக்
கடுஞ்சினத்தோன் றன்னுடலை நேமி யாலே
தடிந்தானைத் தன்னொப்பா ரில்லா தானைத்
தத்துவனை யுத்தமனை நினைவார் நெஞ்சில்
படிந்தானைப் பள்ளியின்முக் கூட லானைப்
பயிலாதே பாழேநா னுழன்ற வாறே.

மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையா னென்னி னல்லான்
ஒப்புடைய னல்ல னொருவ னல்ல
னொரூர னல்ல னோருவம னில்லி



அப்படியு மந்நிறமு மவ்வண் ணமு
மவனருளே கண்ணாகக் காணி னல்லால்
இப்படிய னிந்நிறத்த னிவ்வண் ணத்த
னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொ ணாதே

கருவாகிக் குழம்பிருந்து கலித்து மூளை
கருநரம்பும் வெள்ளெலும்புஞ் சேர்ந்தொன் றாகி
உருவாகிப் புறப்பட்டிங் கொருத்தி தன்னால்
வளக்கப்பட் டுயிராருங் கடைபோ காரால்
மருவாகி நின்னடியே மறவே னம்மான்
மறித்தொருகாற் பிறப்புண்டேன் மறவா வண்ணம்
திருவாரூர் மணவாளா திருத்தெங் கூராய்
செம்பொனே கம்பனே திகைத்திட் டேனே.

அருந்தவத்தோர் தொழுதேத்து மம்மான் றன்னை
யாராத வின்னமுதை யடியார் தம்மேல்
வருந்துயரந் தவிர்ப்பானை உமையா ணங்கை
மணவாள நம்பியையென் மருந்து தன்னைப்
பொருந்துபுன றழுவுவய னிலவு துங்கப்
பொழில்கெழுவு தருமோமாம் புலியூர் நாளும்
திருந்துதிரு வடதளியெஞ் செல்வன் றன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே.

வாயானை மனத்தானை மனத்து ணின்ற
கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் றன்னைத்
தூயானைத் தூவெள்ளை யேற்றான் றன்னைச்
சுடர்திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றென்
தாயானைத் தவமாய தன்மை யானைத்
தலையாய தேவாதி தேவர்க் கென்றும்
சேயானைத் தென்கூடற் றிருவால வாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றே னானே.

திருச்சிற்றம்பலம்

## III. எட்டாந் திருமுறை

### திருவாசகம் — மாணிக்கவாசக சுவாமிகள்

திருச்சிற்றம்பலம்.

தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே—யெல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவா சகமென்னுந் தேன்.

திருச்சிற்றம்பலம்

---

### சிவபுராணம்

திருச்சிற்றம்பலம்.

நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுது மென்னெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அநேக னிறைவ னடிவாழ்க
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவா ருண்மகிழும் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவா ரோங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க
ஈசனடி போற்றி யெந்தை யடிபோற்றி
தேசனடி போற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநந் தேவ னடிபோற்றி
ஆராத இன்பம் அருளு மலைபோற்றி
சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால்
அவனரு ளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தைவினை முழுதும் ஓய வுரைப்பனியான்
கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி



விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியா
யெண்ணிறந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யவென் னுள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா வெனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞான மில்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை யகல்விக்கு நல்லறிவே
ஆக்கம் அளவிறுதி யில்லா யனைத்துலகும்
ஆக்குவாய் காப்பா யழிப்பாய் யருள்தருவாய்
போக்குவா யென்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பி
னாற்றத்தி னேரியாய் சேயாய் நணியானே
மாற்ற மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமா
னிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்க ளேத்த
மறைந்திருந்தா யெம்பெருமான் வல்வினையேன் றன்னை
மறைந்திட மூடிய மாய விருளை
அறம்பாவ மென்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரு மொன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா வுனக்குக்
கலந்தவன் பாகிக் கசிந்துள் ளுருகு
நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி

நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனா ரமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கு மாரியனே
நேச வருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா வமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதா ருள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீரா யுருக்கியென் னாருயிராய் நின்றானே
யின்பமுந் துன்பமும் இல்லானே யுள்ளானே
யன்பருக் கன்பனே யாவையுமா யல்லையுமாஞ்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே யந்த நடுவாகி யல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தி
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே யத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாந்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான வுண்ணா ரமுதே யுடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேனெம் மையா அரனேயோ வென்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே
நள்ளிருளி னட்டம் பயின்றாடு நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி அறுப்பானே யோவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து.

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

மெய்தா னரும்பி விதிர்விதிர்த் துன்விரை
யார்கழற்கென்
கைதான் றலைவைத்துக் கண்ணீர் ததும்பி
வெதும்பியுள்ளம்
பொய்தான் றவிர்ந்துன்னைப் போற்றி சயசய
போற்றியென்னுங்
கைதா னெகிழ விடேனுடை யாயென்னைக்
கண்டுகொள்ளே.

கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு
குடிகெடினு
நள்ளே னினதடி யாரொடல் லானர
கம்புகினு
மெள்ளேன் திருவரு ளாலே யிருக்கப்
பெறினிறைவா
வுள்ளேன் பிறதெய்வ முன்னையல் லாதெங்க
ளுத்தமனே.

உத்த மனத்த னுடையா னடியே
நினைந்துருகி
மத்த மனத்தொடு மாலிவ னென்ன
மனநினைவி
லொத்தன வொத்தன சொல்லிட வூரூர்
திரிந்தெவருந்
தத்த மனத்தன பேசவெஞ் ஞான்றுகொல்
சாவதுவே.

பரந்துபல் லாய்மல ரிட்டுமுட் டாதடி
யேயிறைஞ்சி
யிரந்தவெல் லாமெமக் கேபெற லாமென்னு
மன்பருள்ளங்
கரந்துநில் லாக்கள்வ னேநின்றன் வார்கழற்
கன்பெனக்கு
நிரந்தர மாயரு ளாய்நின்னை யேத்த
முழுவதுமே.

நாடகத்தா லுன்னடியார் போனடித்து நானடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றே
னூடகச்சீர் மணிக்குன்றே யிடையறா வன்புனக்கென்
னூடகத்தே நின்றுருகத் தந்தருளெம் முடையானே.

யானேதும் பிறப்பஞ்சே னிறப்பதனுக் கென்கடவேன்
வானேயும் பெறில்வேண்டேன் மண்ணாள்வான் மதித்துமிரேன்
றேனேயு மலர்க்கொன்றைச் சிவனேயெம் பெருமானெம்
மானேயுன் னருள்பெறுநா ளென்றென்றே வருந்துவனே.

வாழ்த்துவதும் வானவர்க டாம்வாழ்வான் மனநின்பாற்
றாழ்த்துவதுந் தாமுயர்ந்து தம்மையெல்லாந் தொழவேண்டிச்
சூழ்த்துமது கரமுரலுந் தாரோயை நாயடியேன்
பாழ்த்தபிறப் பறுத்திடுவான் யானுமுன்னைப் பரவுவனே.

வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே யெனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தா ழுறுபுனலிற் கீழ்மே லாகப்
பதைத்துருகு மவர்நிற்க வென்னை யாண்டாய்க்
குள்ளந்தா னின்றுச்சி யளவு நெஞ்சா
யுருகாதா லுடம்பெல்லாங் கண்ணா யண்ணா
வெள்ளந்தான் பாயாதா னெஞ்சங் கல்லாங்
கண்ணிணையு மரமாந்தீ வினையி னேற்கே.

தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையா லெற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயா ரென்னுங் காலாற்
கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்
டினியென்னே யுய்யுமா றென்றென் றெண்ணி
யஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை
முனைவனே முதலந்த மில்லா மல்லற்
கரைகாட்டி யாட்கொண்டாய் மூர்க்க னேற்கே

தேவர்கோ வறியாத தேவ தேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை
மூவர்கோ னாய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத் தெந்தை



யாவர்கோ னென்னையும்வந் தாண்டு கொண்டான்
யாமார்க்குங் குடியல்லோம் யாது மஞ்சோ
மேவினோ மவனடியா ரடியா ரோடு
மேன்மேலுங் குடைந்தாடி யாடு வோமே.

ஆடு கின்றிலை கூத்துடை யான்கழற் கன்பிலை யென்புருகிப்
பாடு கின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை பணிகிலை பாதமலர்
சூடு கின்றிலை சூட்டுகின் றதுமிலை துணையிலி பிணநெஞ்சே
தேடு கின்றிலைதெருவுதோ றலறிலை செய்வதொன் றறியேனே.

போற்றியோ நமச்சி வாய புயங்கனே மயங்கு கின்றேன்
போற்றியோ நமச்சி வாய புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றியோ நமச்சி வாய புறமெனைப் போக்கல் கண்டாய்
போற்றியோ நமச்சி வாய சயசய போற்றி போற்றி.

கடையவ னேனைக் கருணையி னாற்கலந் தாண்டுகொண்ட
விடையவ னேவிட் டிடுதிகண் டாய்விறல் வேங்கையின்றோ
லுடையவ னேமன்னு முத்தர கோசமங் கைக்கரசே
சடையவ னேதளர்ந் தேனெம்பி ரானென்னைத் தாங்கிக்கொள்ளே.

காருறு கண்ணிய ரைம்புல னாற்றங் கரைமரமாய்
வேருறு வேனை விடுதிகண் டாய்விளங் குந்திருவா
ரூருறை வாய்மன்னு முத்தர கோசமங் கைக்கரசே
வாருறு பூண்முலை யாள்பங்க வென்னை வளர்ப்பவனே.

உடையா னுன்ற னடுவிருக்கு
முடையா ணடுவு ணீயிருத்தி
யடியே னடுவு ளிருவீரு
மிருப்ப தானா லடியேனுன்
னடியார் நடுவு ளிருக்குமரு
ளைப்புரி யாய்பொன் னம்பலத்தெம்
முடியா முதலே யென்கருத்து
முடியும் வண்ண முன்னின்றே.

அரைசே பொன்னம் பலத்தாடு
மமுதே யென்றுன் னருணோக்கி
யிரைதேர் கொக்கொத் திரவுபக
லேசற் றிருந்தே வேசற்றேன்

கரைசே ரடியார் களிசிறப்பக்
காட்சி கொடுத்துன் னடியேன்பாற்
பிரைசேர் பாலி னெய்போலப்
பேசா திருந்தா லேசாரோ.

அருளா தொழிந்தா லடியேனை
யஞ்சே லென்பா ராரிங்குப்
பொருளா வென்னைப் புகுந்தாண்ட
பொன்னே பொன்னம் பலக்கூத்தா
மருளார் மனத்தோ டுனைப்பிரிந்து
வருந்து வேனை வாவென்றுன்
றெருளார் கூட்டங் காட்டாயேற்
செத்தே போனாற் சிரியாரோ.

சிரிப்பார் களிப்பார் தேனிப்பார்
திரண்டு திரண்டுன் றிருவார்த்தை
விரிப்பார் கேட்பார் மெச்சுவார்
வெவ்வே றிருந்துன் றிருநாமந்
தரிப்பார் பொன்னம் பலத்தாடுந்
தலைவா வென்பா ரவர்முன்னே
நரிப்பாய் நாயே னிருப்பேனோ
நம்பி யினித்தா னல்காயே.

மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத் தமுதே
யூறிநின் றென்னு ளெழுபரஞ் சோதி
யுள்ளவா காணவந் தருளாய்
தேறலின் றெளிவே சிவபெரு மானே
திருப்பெருந் துறையுறை சிவனே
யீறிலாப் பதங்க ளியாவையுங் கடந்த
வின்பமே யென்னுடை யன்பே.

இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் றன்மை நினைப்பற நினைந்தே
னீயலாற் பிறிதுமற் றின்மை



சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந்
திருப்பெருந் துறையுறை சிவனே
யொன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை
யாருன்னை யறியகிற் பாரே.

தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா வார்கொலோ சதுர
ரந்தமொன் றில்லா வானந்தம் பெற்றே
னியாதுநீ பெற்றதொன் றென்பாற்
சிந்தையே கோயில் கொண்டவெம் பெருமான்
றிருப்பெருந் துறையுறை சிவனே
யெந்தையே யீசா வுடலிடங் கொண்டா
யானிதற் கிலனோர்கைம் மாறே.

புற்று மாய்மர மாய்ப்புனல் காலே
யுண்டி யாயண்ட வானரும் பிறரும்
வற்றி யாருநின் மலரடி காணா
மன்ன வென்னையோர் வார்த்தையுட் படுத்துப்
பற்றி னாய்பதை யேன்மனமிக வுருகேன்
பரிகி லேன்பரி யாவுட றன்னைச்
செற்றி லேனின்னுந் திரிதரு கின்றேன்
றிருப்பெ ருந்துறை மேவிய சிவனே.

செழுக்கம லத்திர ளனநின் சேவடி சேர்ந்தமைந்த
பழுத்த மனத்தடி யருடன் போயினர் யான்பாவியேன்
புழுக்க ணுடைப்புன் குரம்பைப்பொல் லாக்கல்வி ஞானமிலா
வழுக்கு மனத்தடி யேனுடை யாயுன் னடைக்கலமே.

பாரொடு விண்ணாய்ப் பரந்தவெம் பரனே
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
சீரொடு பொலிவாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாரொடு நோகே னார்க்கெடுத் துரைக்கே
னாண்டநீ யருளிலை யானால்
வார்கட லுலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே.

சோதியே சுடரே சூழொளி விளக்கே
சுரிகுழற் பணைமுலை மடந்தை
பாதியே பரனே பால்கொள்வெண் ணீற்றாய்
பங்கயத் தயனுமா லறியா
நீதியே செல்வத் திருப்பெருந் துறையி
னிறைமலர்க் குருந்தமே வியசீ
ராதியே யடியே னாதரித் தழைத்தா
லதெந்துவே யென்றரு ளாயே.

நிருத்தனே நிமலா நீற்றனே நெற்றிக்
கண்ணனே விண்ணுளோர் பிரானே
யொருத்தனே யுன்னை யோலமிட் டலறி
யுலகெலாந் தேடியுங் காணேன்
றிருத்தமாம் பொய்கைத் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீ
ரருத்தனே யடியே னாதரித் தழைத்தா
லதெந்துவே யென்றரு ளாயே.

முத்தனே முதல்வா முக்கணா முனிவா
மொட்டறா மலர்பறித் திறைஞ்சிப்
பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப்
பரகதி கொடுத்தருள் செய்யுஞ்
சித்தனே செல்வத் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீ
ரத்தனே யடியே னாதரித் தழைத்தா
லதெந்துவே யென்றரு ளாயே.

இந்திரிய வயமயங்கி யிறப்பதற்கே காரணமா
யந்தரமே திரிந்துபோ யருநரகில் வீழ்வேற்குச்
சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
வந்தமிலா வானந்த மணிகொடில்லை கண்டேனே.

வினைப்பிறவி யென்கின்ற வேதனையி லகப்பட்டுத்
தனைச்சிறிது நினையாதே தளர்வெய்திக் கிடப்பேனை
யெனைப்பெரிது மாட்கொண்டென் பிறப்பறுத்த வினையிலியை
யனைத்துலகுந் தொழுந்தில்லை யம்பலத்தே கண்டேனே.



உருத்தெரியாக் காலத்தே யுள்புகுந்தென் னுளமன்னிக்
கருத்திருத்தி யூன்புக்குக் கருணையினா லாண்டுகொண்ட
திருத்துருத்தி மேயானைத் தித்திக்குஞ் சிவபதத்தை
யருத்தியினா னாயடியே னணிகொடில்லை கண்டேனே.

கல்லாத புல்லறிவிற் கடைப்பட்ட நாயேனை
வல்லாள னாய்வந்து வனப்பெய்தி யிருக்கும்வண்ணம்
பல்லோருங் காணவென்றன் பசுபாச மறுத்தானை
யெல்லோரு மிறைஞ்சுதில்லை யம்பலத்தே கண்டேனே.

சாதிகுலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறு
மாதமிலி நாயேனை யல்லலறுத் தாட்கொண்டு
பேதைகுணம் பிறருருவம் யானெனதென் னுரைமாய்த்துக்
கோதிலமு தானானைக் குலாவுதில்லை கண்டேனே.

குழைத்தாற் பண்டைக் கொடுவினைநோய்
காவா யுடையாய் வொடுவினையே
னுழைத்தா லுறுதி யுண்டோதா
னுமையாள் கணவா வெனையாள்வாய்
பிழைத்தாற் பொறுக்க வேண்டாவோ
பிறைசேர் சடையாய் முறையோவென்
றழைத்தா லருளா தொழிவதே
யம்மா னேயுன் னடியேற்கே.

கூறு நாவே முதலாகக்
கூறுங் கரண மெல்லாநீ
தேறும் வகைநீ திகைப்புநீ
தீமை நன்மை முழுதுநீ
வேறோர் பரிசிங் கொன்றில்லை
மெய்ம்மை யுன்னை விரித்துரைக்கிற்
றேறும் வகையென் சிவலோகா
திகைத்தாற் றேற்ற வேண்டாவோ.

வேண்டத் தக்க தறிவோய்நீ
வேண்ட முழுதுந் தருவோய்நீ
வேண்டு மயன்மாற் கரியோய்நீ
வேண்டி யென்னைப் பணிகொண்டாய்

வேண்டி நீயா தருள்செய்தா
யானு மதுவே வேண்டினல்லால்
வேண்டும் பரிசொன் றுண்டென்னி
லதுவு முன்றன் விருப்பன்றே.

அன்றே யென்ற னுவியு
முடலு முடைமை யெல்லாமுங்
குன்றே யனையா யென்னையாட்
கொண்ட போதே கொண்டிலையோ
வின்றோ ரிடையூ றெனக்குண்டோ
வெண்டோண் முக்க ணெம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
நானோ விதற்கு நாயகமே.

உம்பர்கட் கரசே யொழிவற நிறைந்த
யோகமே யூற்றையேன் றனக்கு
வம்பெனப் பழுத்தென் குடிமுழு தாண்டு
வாழ்வற வாழ்வித்த மருந்தே
செம்பொருட் டுணிவே சீருடைக் கழலே
செல்வமே சிவபெரு மானே
யெம்பொருட் டுன்னைச் சிக்கெனப் பிடித்தே
னெங்கெழுந் தருளுவ தினியே.

அம்மையே யப்பா வொப்பிலா மணியே
யன்பினில் விளைந்தவா ரமுதே
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் றனக்குச்
செம்மையே யாய சிவபத மளித்த
செல்வமே சிவபெரு மானே
யிம்மையே யுன்னைச் சிக்கெனப் பிடித்தே
னெங்கெழுந் தருளுவ தினியே

பாசவே ரறுக்கும் பழம்பொரு டன்னைப்
பற்றுமா றடியனேற் கருளிப்
பூசனை யுகந்தென் சிந்தையுட் புகுந்து
பூங்கழல் காட்டிய பொருளே



தேசுடை விளக்கே செழுஞ்சுடா மூர்த்தீ
செல்வமே சிவபெரு மானே
யீசனே யுன்னைச் சிக்கெனப் பிடித்தே
னெங்கெழுந் தருளுவ தினியே.

பாலினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
வூனினை யுருக்கி யுள்ளொளி பெருக்கி
யுலப்பிலா வானந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தே
னெங்கெழுந் தருளுவ தினியே.

புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலா முருக்கி யெளியையா யாண்ட
வீசனே மாசிலா மணியே
துன்பமே பிறப்பே யிறப்பொடு மயக்காந்
தொடக்கெலா மறுத்தநற் சோதி
யின்பமே யுன்னைச் சிக்கெனப் பிடித்தே
னெங்கெழுந் தருளுவ தினியே.

கண்க ளிரண்டு மவன்கழல் கண்டு களிப்பன வாகாதே
காரிகை யார்கடம் வாழ்விலென் வாழ்வு கடைப்படு மாகாதே
மண்களில் வந்து பிறந்திடு மாறு மறந்திடு மாகாதே
மாலறி யாமலர்ப் பாத மிரண்டும் வணங்குது மாகாதே
பண்களி கூர்தரு பாடலொ டாடல் பயின்றிடு மாகாதே
பாண்டிநன் னாடுடை யான்படை யாட்சிகள் பாடுது மாகாதே
விண்களி கூர்வதோர் வேதகம் வந்து வெளிப்படு மாகாதே
மீன்வலை வீசிய கானவன் வந்து வெளிப்படு மாயிடிலே.

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதிதுணை

## புராணம்

திருச்சிற்றம்பலம்

### விநாயகக்கடவுள்

மண்ணுல கத்தினிற் பிறவி மாசற
எண்ணிய பொருளெலா மெளிதின் முற்றுறக்
கண்ணுத லுடையதோர் களிற்று மாமுகப்
பண்ணவன் மலரடி பணிந்து போற்றுவாம்.

உள்ளமெனுங் கூடத்தி லூக்கமெனுந்
தறிநிறுவி யுறுதி யாகத்
தள்ளரிய வன்பென்னுந் தொடர்பூட்டி
யிடைப்படுத்தித் தறுகட் பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக்
களித்துண்டு கருணை யென்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை
நினைந்துவரு வினைக டீர்ப்பாம்.

உச்சியின் மகுட மின்ன வொளிர்தர நுதலி னோடை
வச்சிர மருப்பி னொற்றை மணிகொள்கிம் புரிவ யங்க
மெச்செவிக் கவரி தூங்க வேழமா முகங்கொண் டுற்ற
கச்சியின் விகட சக்ர கணபதிக் கன்பு செய்வாம்.

### உமாதேவியார்

செறிதரு முயிர்தொறுந் திகழ்ந்து மன்னிய
மறுவறு மரனிட மரபின் மேவியே
அறுவகை நெறிகளும் பிறவு மாக்கிய
இறைவிதன் மலரடி யிறைஞ்சி யேத்துவாம்.

மனிதருந் தேவரு மாயா முனிவரும் வந்துசென்னி
குனிதருஞ் சேவடிக் கோமள மேகொன்றை வார்சடைமேற்
பனிதருந் திங்களும் பாம்பும் பகீரதி யும்படைத்த
புனிதரு நீயுமென் புந்தியெந் நாளும் பொருந்துகவே.



நின்று மிருந்துங் கிடந்து நடந்து நினைப்பதுன்னை
என்றும் வணங்குவ துன்மலர்த் தாளெழு தாமறையின்
ஒன்று மரும்பொரு ளேயரு ளேயுமை யேயிமயத்
தன்றும் பிறந்தவ ளேயழி யாமுத்தி யானந்தமே.

சொல்லும் பொருளு மெனநட மாடுந் துணைவருடன்
புல்லும் பரிமளப் பூங்கொடி யேநின் புதுமலர்த்தாள்
அல்லும் பகலுந் தொழுமவர்க் கேயழி யாவரசுஞ்
செல்லுந் தவநெறி யுஞ்சிவ லோகமுஞ் சித்திக்குமே.

ஆத்தாளை யெங்க ளபிராம வல்லியை யண்டமெல்லாம்
பூத்தாளை மாதுளம் பூநிறத் தாளை புவியடங்கக்
காத்தாளை யங்குச பாசாங் குசமும் கரும்புமங்கை
சேத்தாளைமுக்கண்ணி யைத்தொழு வார்க்கொரு தீங்கில்லையே.

பரந்தெழுந்த சமண்முதலாம் பரசமய விருணீங்கச்
சிரந்தழுவு சைவநெறித் திருநீற்றி னொளிவிளங்க
அரந்தைகெடப் புகலியர்கோ னமுதுசெயத் திருமுலைப்பால்
சுரந்தளித்த சிவகாம சுந்தரிபூங் கழல்போற்றி.

இருபதமுந் துடியிடையுந் திகழுடையுந்
தனதடமு மியல்பொற் பூணுங்
கருவிழியுஞ் செவ்வாயும் வெண்ணகையும்
பசுந்தேனுங் கழுநீர்க் கையும்
பொருவருமங் கலநாணுங் கந்தரமும்
புரிகுழலும் புனிதன் கண்ணுந்
திருவருளு முலாவுமெழிற் சிவகாம
சுந்தரிதாள் சென்னி சேர்ப்பாம்.

### தக்ஷிணாமூர்த்தி

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா
றங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்க ளொல்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமா யல்லதுமா யிருந்ததனை
யிருந்தபடி யிருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாம
னினைந்துபவத் தொடக்கை வெல்வாம்.

### வைரவக் கடவுள்

பரமனை மதித்திடாப் பங்க யாசனன்
ஒருதலை கிள்ளியே யொழிந்த வானவர்
குருதியு மகந்தையுங் கொண்டு தண்டமுன்
புரிதரு வடுகனைப் போற்றி செய்குவாம்.

### சுப்பிரமணியக்கடவுள் திருப்புராணம்

✓ பன்னிரு கரத்தாய் போற்றி
    பசும்பொன்மா மயிலாய் போற்றி
முன்னிய கருணை யாறு
    முகப்பரம் பொருளே போற்றி
கன்னிய ரிருவர் நீங்காக்
    கருணைவா ரிதியே போற்றி
என்னிரு கண்ணே கண்ணு
    ளிருக்குமா மணியே போற்றி.

### விருத்தம்

மூவிரு முகங்கள் போற்றி
    முகம்பொழி கருணை போற்றி
ஏவருந் துதிக்க நின்ற
    வீராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேண்
    மலரடி போற்றி யன்னுன்
சேவலு மயிலும் போற்றி
    திருக்கைவேல் போற்றி போற்றி.

அருவமு முருவ மாகி
    அநாதியாய்ப் பலவாய் ஒன்ருய்
பிரமமாய் நின்ற சோதிப்
    பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்க ளாறுங்
    கரங்கள்பன் னிரண்டுங் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங்
    குதித்தன னுலக முய்ய.



புன்னெறி யதனிற் செல்லும்
    போக்கினை விலக்கி மேலாம்
நன்னெறி யொழுகச் செய்து
    நவையறு காட்சி நல்கி
என்னையு மடிய ஞக்கி
    யிருவினை நீக்கி யாண்ட
பன்னிரு தடந்தோள் வள்ளல்
    பாதபங் கயங்கள் போற்றி

### வெண்பா

உன்னை யொழிய யொருவரையு நம்புகிலேன்
பின்னை யொருவரையான் பின்செல்லேன்—பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்தவாழ் வே.

### கட்டளைக்கலித்துறை

நாளென் செயும்வினை தானென் செயுமெனை நாடிவந்த
கோளென் செயுங்கொடுங் கூற்றென் செயுங்கும ரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந் தண்டையுஞ் சண்முகமுந்
தோளுங் கடம்பு மெனக்குமுன் னேவந்து தோன்றிடினே.

ஆங்கா ரமுமடங் காரொடுங் கார்பர மானந்தத்தே
தேங்கார் நினைப்பு மறப்பு மருர்தினைப் போதளவு
ஓங்கா ரத்துள் ளொளிக்குள்ளே முருக னுருவங்கண்டு
தூங்கார் தொழும்புசெய் யாரென்செய் வார்யம தூதருக்கே.

திருச்சிற்றம்பலம்

## திருப்புகழ்

### அருணகிரிநாதர்

திருச்சிற்றம்பலம்

கைத்தல நிறைகனி அப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுக னடிபேணிக்
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவ
கற்பக எனவினை கடிதேகு
மத்தமும் மதியமும் வைத்திடும் அரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே
முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட வெழுதிய முதல்வோனே
முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரத
அச்சது பொடிசெய்த அதிதீரா
அத்துய ரதுகெட சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை யிபமாகி
அக்குற மகளுட னச்சிறு முருகனை
அக்கணம் மணமருள் பெருமாளே.

இசைந்த ஏறுங் கரியுரி போர்வையும் எழில்நீறும்
இலங்கு நூலும் புலியத ளாடையு மழுமானும்
அசைந்த தோடுஞ் சிரமணி மாலையு முடிமீதே
அணிந்த ஈசன் பரிவுடன் மேவிய குருநாதா
உசந்த மாறன் பதிமிகு கூடலி லுறைவோனே
உகந்த பாசங் கயிறொடு தூதுவர் நலியாதே
அசந்த போதென் துயர்கெட மாமயில் வரவேணும்
அமைந்த வேலும் புயமிசை மேவிய பெருமாளே.

கருவினுரு வாகிவந்து வயதளவி லேவளர்ந்து
கலைகள்பல வேதெரிந்து மதனாலே
கரியகுழல் மாதர்தங்க ளடிசுவடு மார்புதைந்து
கவலைபெரி தாகிநொந்து மிகவாடி



அரகரசி வாயவென்று தினமுநினை யாமல்நின்று
அறுசமய நீதியொன்று மறியாமல்
அசனமிடு வார்கள்தங்கள் மனைகள்தலை வாசல்நின்று
அநுதினமும் நாணமின்றி அழிவேனோ
உரகபட மேல்வளர்ந்த பெரியபெரு மாளரங்கர்
உலகளவு மால்மகிழ்ந்த மருகோனே
உபயகுல தீபவங்க விருதுகவி ராஜசிங்க
உறைபுகலி யூரிலன்று வருவோனே
பரவைமனை மீதிலன்று ஒருபொழுது தூதுசென்ற
பரமனரு ளால்வளர்ந்த குமரேசா
பகையசுரர் சேனைகொன்று அமரர்சிறை மீளவென்று
பழநிமலை மீதில்நின்ற பெருமாளே.

பத்தியால் யானுனைப் பலகாலும்
பற்றியே மாதிருப் புகழ்பாடி
முத்தனா மாறெனைப் பெருவாழ்வின்
முத்தியே சேர்வதற் கருள்வாயே
உத்தமா தானசற் குணர்நேயா
ஒப்பிலா மாமணிக் கிரிவாசா
வித்தகா ஞானசத் திநிபாதா
வெற்றிவே லாயுதப் பெருமாளே.

சரணகம லாலயத்தை அரைநிமிஷ நேரமட்டில்
தவமுறைதி யானம்வைக்க அறியாத
சடகசட மூடமட்டி பவவினையி லேசனித்த
தமியன்மிடி யால்மயக்க முறுவேனோ
கருணைபுரி யாதிருப்ப தெனகுறையி வேளைசெப்பு
கயிலைமலை நாதர்பெற்ற குமரோனே
கடகபுய மீதிரத்ந மணியணிபொன் மாலைசெச்சை
கமழுமண மார்கடப்ப மணிவோனே
தருணமிதை யாமிகுத்த கனமதுறு நீள்சவுக்ய
சகலசெல்வ யோகமிக்க பெருவாழ்வு
தகைமைசிவ ஞானமுத்தி பரகதியு நீகொடுத்து
தவிபுரிய வேணுநெய்த்த வடிவேலா

அருணதள பாதபத்ம மநுதினமு மேதுதிக்க
அரியதமிழ் தானளித்த மயில்வீரா
அதிசயம னேகமுற்ற பழநிமலை மீதுதித்த
அழகதிரு வேரகத்தின் முருகோனே.

சந்ததம் பந்தத் தொடராலே
சஞ்சலம் துஞ்சித் திரியாதே
கந்தனென் றென்றுற் றுனைநாளும்
கண்டுகொண் டன்புற் றிடுவேனோ
தந்தியின் கொம்பைப் புணர்வோனே
சங்கரன் பங்கிற் சிவபாலா
செந்திலங் கண்டிக் கதிர்வேலா
தென்பரங் குன்றிற் பெருமாளே.

பாதி மதிநதி போது மணிசடை
நாத னருளிய குமரேசா
பாகு கனிமொழி மாது குறமகள்
பாதம் வருடிய மணவாளா
காது மொருவிழி காக முறவருள்
மாய னரிதிரு மருகோனே
கால னெனையணு காம லுனதிரு
காலில் வழிபட அருள்வாயே
ஆதி யயனொடு தேவர் சுரருல
காளும் வகையுறு சிறைமீளா
ஆடு மயிலினி லேறி யமரர்கள்
சூழ வலம்வரு மிளையோனே
சூத மிகவளர் சோலை மருவுசு
வாமி மலைதனில் உறைவோனே
சூர னுடலற வாரி சுவறிட
வேலை விடவல பெருமாளே.

மருவே செறித்த குழலார் மயக்கி
மதனு கமத்தின் விரகாலே
மயலே யெழுப்பி யிதமே யருத்தி
மலைபோல் முலைக்குள் உறவாகி



பெருகாத லுற்ற தமியேனை நித்தல்
பிரியாது பட்ச மறவாதே
பிழையே பொறுத்து னிருதாளி லுற்ற
பெருவாழ்வு பற்ற வருள்வாயே
குருவா யரற்கு முபதேசம் வைத்த
குகனே குறத்தி மணவாளா
குளிர்கான் மிகுத்த வளர்போத முற்ற
குடகா விரிக்கு வடபால்வாழ்
திருமாற னுக்கு மருகா வுமைக்கோர்
சிறுவா கரிக்கு மிளையோனே
திருவே ரகத்தி லுறைவா யரக்கர்
சிரமே துணித்த பெருமாளே.

ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
ஈசனுடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்த்தமுக மொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே
மாறுபடு சூரனைவ தைத்தமுக மொன்றே
வள்ளியைம ணம்புணர வந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
ஆதியரு ணாசல மமர்ந்தபெரு மாளே.

✓

அகரமு மாகி அதிபனு மாகி
அதிகமு மாகி அகமாகி
அயனென வாகி அரியென வாகி
அரனென வாகி அவர்மேலாய்
இகரமு மாகி எவைகளு மாகி
இனிமையு மாகி வருவோனே
இருநில மீதில் எளியனும் வாழ
எனதுமு னோடி வரவேணும்
மகபதி யாகி மருவும்வ லாரி
மகிழ்களி கூரும் வடிவோனே
வனமுறை வேட னருளிய பூஜை
மகிழ்கதிர் காம முடையோனே

செககண சேகு தகுதிமி தோதி
திமியென ஆடு மயிலோனே
திருமலி வான பழமுதிர் சோலை
மலைமிசை மேவு பெருமாளே.

இருவினையின் மதிமயங்கித் திரியாதே
எழுநரகி லுழலுநெஞ்சுற் றலையாதே
பரமகுரு அருள்நினைந்திட் டுணர்வாலே
பரவுதெரி சனையைஎந்தற் கருள்வாயே
தெரிதமிழை யுதவுசங்கப் புலவோனே
சிவனருளு முருகசெம்பொற் கழலோனே
கருணைநெறி புரியுமன்பர்க் கெளியோனே
கனகசபை மருவுகந்தப் பெருமானே.

✓✓ எழுகடல் மணலை அளவிடி னதிக
மெனதிடர் பிறவி அவதாரம்—அப்பா
இனியுன தபய மெனதுயி ருடலும்
இனியுடல் விடுக முடியாது—அப்பா
கழுகொடு நரியு மெரிபுவி மறலி
கமலனு மிகவும் அயர்வானூர்—அப்பா
கடனுன தபய மடிமையு னடிமை
கடுகியு னடிகள் தருவாயே—அப்பா
விழுதிக ழழகி மரகத வடிவி
விமலிமு னருளு முருகோனே
விரிதல மெரிய குலகிரி நெரிய
விசைபெறு மயிலில் வருவோனே
எழுகடல் குமுற அவுணர்க ளுயிரை
யிரைகொளு மயிலை உடையோனே
இமையவர் முனிவர் பரவிய புலியூ
ரினில்நட மருவு பெருமாளே.

காணொ ணாதது உருவோ டருவது
பேசொ ணாதது உரையே தருவது
காணு நான்மறை முடிவாய் நிறைவது பஞ்சபூதக்
காய பாசம தனிலே உறைவது
மாய மாயுட லறியா வகையது
காய மானவ ரெதிரே யவரென வந்துபேசிப்



பேணொ ணாதது வெளியேய் ஒளியது
மாய னாரயன் அறியா வகையது
பேத பேதமொ டுலகாய் வளர்வது விந்துநாதப்
பேறு மாகலை துரியா துரியவ
தீத மானது வினையேன் முடிதவப்
பேறு மாயருள் நிறைவாய் விளைவது ஒன்றுநீயே
வீணொ ணாதென அமையா தசுரரை
நூறி யேயுயிர் நமனீ கொளுவென
வேல்க டாவிய கரனே உமைமுலை உண்டகோவே
வேத நான்முக மறையோ னொடும்விளை
யாடி யேகுடு மயிலே கரமொடு
வீற மோதின வழகா குறவர்கு றிஞ்சியூடே
சேணொ ணாயிடு மிதண்மே லரிவையை
மேவி யேமயல் கொளலீ லைகள்செய்து
சேர நாடிய திருடா அருடரு கந்தவேலே
சேரொ ணாவகை வெளியே திரியுமெய்ஞ்
ஞான யோகிக ளுளமே உறைதரு
தேவ னூர்வரு குமரா அமரர்கள் தம்பிரானே.

### பிள்ளைத்தமிழ்

பேரா தரிக்கு மடியவர்தம் ✓
பிறப்பை யொழித்துப் பெருவாழ்வும்
பேறுங் கொடுக்க வரும்பிள்ளைப்
பெருமா னென்னும் பேராளா
சேரா நிருதர் குலகலகா
சேவற் கொடியாய் திருச்செந்தூர்த்
தேவா தேவர் சிறைமீட்ட
செல்வா வென்றுன் திருமுகத்தைப்
பாரா மகிழ்ந்து முலைத்தாயர்
பரவிப் புகழ்ந்து விருப்புடனப்பா
வாவா வென் றுனைப்போற்றி
பரிந்து மகிழ்ந்து வரவழைத்தால்
வாரா திருக்க வழக்குண்டோ
வடிவேல் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே.

திருச்சிற்றம்பலம்,

## பட்டணத்தார் பாடல்

திருச்சிற்றம்பலம்.

அத்தனை முப்பத்து முக்கோடி தேவர்க் கதிபதியை
நித்தனை அம்மை சிவகாம சுந்தரி நேசனையெங்
கத்தனைப் பொன்னம் பலத்தாடும் ஐயனைக் காணக்கண்க
ளெத்தனை கோடி யுகமோ தவஞ்செய் திருக்கின்றவே.

நன்னாரிற் பூட்டிய சூத்திரப் பாவைநன் னார்தப்பினாற்
றன்னாலு மாடிச் சலித்திடு மோவந்தத் தன்மையைப்போல்
உன்னா லியானுந் திரிவதல் லான்மற் றுனைப்பிரிந்தால்
என்னாலிங் காவதுண் டோ?இறை வா,கச்சி யேகம்பனே.

பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லை; பிறந்துமண்மே
லிறக்கும் பொழுது கொடுபோவ தில்லை; யிடைநடுவிற்
குறிக்குமிச் செல்வஞ் சிவன்றந்த தென்று கொடுக்கறியா
திறக்குங் குலாமருக் கென்சொல்லு வேன்கச்சி யேகம்பனே.

கல்லாப் பிழையுங் கருதாப் பிழையுங் கசிந்துருகி
நில்லாப் பிழையு நினையாப் பிழையுநின் னஞ்செழுத்தைச்
சொல்லாப் பிழையுந் துதியாப் பிழையுந் தொழாப்பிழையு
மெல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய்கச்சி யேகம்பனே.

வாளான் மகவரிந் தூட்டவல் லேனல்லன் மாதுசொன்ன
சூளா லிளமை துறக்கவல் லேனல்லன் தொண்டுசெய்து
நாளாறிற் கண்ணிடந் தப்பவல் லேனல்லன் நானினிச்சென்
றாளாவ தெப்படி யோதிருக் காளத்தி யப்பருக்கே.

ஐயுந் தொடர்ந்து விழியும் செருகி யறிவழிந்து
மெய்யும்பொய்யாகிவிடுகின்றபோதொன்றுவேண்டுவன்யான்
செய்யுந் திருவொற்றி யூருடை யீர்!திரு நீறுமிட்டுக்
கையுந் தொழப்பண்ணி யைந்தெழுத் தோதவுங் கற்பியுமே.

வினைப்போக மேயொரு தேகங்கண் டாய்வினை தானொழிந்தால்
தினைப்போ தளவுநில் லாதுகண் டாய்சிவன் பாதநினை
நினைப்போரை மேவு நினையாரை நீங்கிந் நெறியில்நின்றால்
உனைப்போ லொருவருண் டோ?மன மேஎனக் குற்றவரே



நல்லா ரிணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே
அல்லாது வேறு நிலையுள தோஅக மும்பொருளும்
இல்லாளும் சுற்றமும் மைந்தரும் வாழ்வும் எழிலுடம்பும்
எல்லாம் வெளிமயக் கேஇறை வா!கச்சி யேகம்பனே.

ஊட்டுவிப் பானு முறங்குவிப் பானுமிங் கொன்றோடொன்றை
மூட்டுவிப் பானு முயங்குவிப் பானு முயன்றவினை
காட்டுவிப் பானு மிருவினைப் பாசக் கயிற்றின்வழி
யாட்டுவிப் பானு மொருவனுண் டேதில்லை யம்பலத்தே.

தெய்வச் சிதம்பர தேவா!உன் சித்தம் திரும்பிவிட்டால்
பொய்வைத்த சொப்பன மாமன்னர் வாழ்வும் புவியுமெங்கே
மெய்வைத்த செல்வமெங் கேமண் டலீகர்தம் மேடையெங்கே
கைவைத்த நாடக சாலையெங் கேயிது கண்மயக்கே.

மாயநட் போரையும் மாயா மலமெனும் மாதரையும்
வீயவிட் டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாம்
தாயுடன் சென்றுபின் தாதையைக் கூடிப்பின் தாயைமறந்து
ஏயும தேநிட்டை யென்றான் எழிற்கச்சி யேகம்பனே.

திருச்சிற்றம்பலம்.

## தாயுமானசுவாமிகள்

திருச்சிற்றம்பலம்.

அங்கிங் கெனாதபடி யெங்கும்பிர காசமா
யானந்த பூர்த்தி யாகி
அருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
யகிலாண்ட கோடி யெல்லாந்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது மனவாக் கினிற்
றட்டாம னின்றதெது சமயகோ டிகளெலாந்
தந்தெய்வ மெந்தெய்வ மென்
றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது
வெங்கணும் பெருவ ழக்காய்
யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமா
யென்றைக்கு முள்ள தெதுமேற்
கங்குல்பக லறநின்ற வெல்லையுள தெதுவது
கருத்துக் கிசைந்த ததுவே
கண்டன வெலாமோன வுருவெளிய தாகவுங்
கருதியஞ் சலிசெய்கு வாம்.

காகமா னதுகோடி கூடிநின் றாலுமொரு
கல்லின்முன் னெதிர்நிற்கு மோ
கர்மமா னதுகோடி முன்னேசெய் தாலுநின்
கருணைப்பிர வாக வருளைத்
தாகமாய் நாடினரை வாதிக்க வல்லதோ
தமியனேற் கருட்டாக மோ
சற்றுமிலை யென்பதுவும் வெளியாச்சு வினையெலாம்
சங்கேத மாய்க் கூடியே
தேகமா னதைமிகவும் வாட்டுதே துன்பங்கள்
சேராமல் யோக மார்க்கச்
சித்தியோ வரவில்லைச் சகசநிட் டைக்குமென்
சிந்தைக்கும் வெகுதூர நான்
ஏகமாய் நின்னோ டிருக்குநா ளெந்நா
ளின்னுளின் முற்றா ருதோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே.



அரும்பொனே மணியேயெ னன்பேயெ னன்பான
அறிவேயெ னறிவி லூறு
மானந்த வெள்ளமே யென்றென்று பாடினே
னாடினே னாடி நாடி
விரும்பியே கூவினே னுலறினே னலறினேன்
மெய்சிலிர்த் திருகை கூப்பி
விண்மாரி யெனவெனிரு கண்மாரி பெய்யவே
வேசற் றயர்ந்தே னியான்
இரும்புநேர் நெஞ்சகக் கள்வனா னாலுமுனை
யிடைவிட்டு நின்ற துண்டோ
என்றுநீ அன்றுநா னுன்னடிமை யல்லவோ
யாதேனு மறியா வெறுந்
துரும்பனே னென்னினுங் கைவிடுத னீதியோ
தொண்டரொடு கூட்டு கண்டாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவா ரியே.

கல்லேனு மையவொரு காலத்தி லுருகுமென்
கன்னெஞ்ச முருக விலையே
கருணைக் கிணங்காத வன்மையையு நான்முகன்
கற்பிக்க வொருக டவுளோ
வல்லான் வகுத்ததே வாய்க்கா லெனும்பெரு
வழக்குக் கிழுக்கு முண்டோ
வானமாய் நின்றின்ப மழையா யிரங்கியெனை
வாழ்விப்ப துன்ப ரங்காண்
பொல்லாத சேயெனிற் றாய்தள்ள நீதமோ
புகலிடம் பிறிது முண்டோ
பொய்வார்த்தை சொல்லிலோ திருவருட் கயலுமாய்ப்
புன்மையே னாவ னந்தோ
சொல்லான் முழக்கிலோ சுகமில்லை மௌனியாய்ச்
சும்மா விருக்க வருளாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவா ரியே.

தந்தை தாயுநீ என்னுயிர்த் துணையுநீ சஞ்சல மதுதீர்க்க
வந்த தேசிக வடிவுநீ யுனையலால் மற்றொரு துணைகாணேன்
அந்தம் ஆதியு மளப்பருஞ் சோதியே யாதியே யடியார்தஞ்
சிந்தை மேவிய தாயுமா னவனெனுஞ் சிரகிரிப் பெருமானே.

பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப்பிள்ளையைப்போல்
ஆருந் துறக்கை அரிதரிது—நேரே
மனத்துறவும் அப்படியே மாணா இவற்றில்
உனக்கிசைந்த வாறொன்றே ஓர்.

தேவரெலாந் தொழச்சிவந்த செந்தாள் முக்கட்
செங்கரும்பே மொழிக்குமொழி தித்திப் பாக
மூவர்சொலுந் தமிழ்கேட்குந் திருச்செ விக்கே
மூடனேன் புலம்பியசொன் முற்று மோதான்

சும்மா விருக்கச் சுகஞ்சுக மென்று சுருதியெல்லாம்
அம்மா நிரந்தரஞ் சொல்லவுங் கேட்டு மறிவின்றியே
பெம்மான் மவுனி மொழியையுந் தப்பியென் பேதைமையால்
வெம்மாயக் காட்டி லலைந்தே னந்தோவென் விதிவசமே.

ஆயுங் கலையுஞ் சுருதியுங் காண்டற் கரியவுனைத்
தோயும் படிக்குக் கருணைசெய் வாய்சுக வான்பொருளே
தாயும் பிதாவுந் தமருங் குருவுந் தனிமுதலும்
நீயும் பரையுமென் றேயுணர்ந் தேனிது நிச்சயமே.

கல்லா லெறிந்துங்கை வில்லா லடித்துங் கனிமதுரச்
சொல்லாற் றுதித்துநற் பச்சிலை தூவியுந் தொண்டரினம்
எல்லாம் பிழைத்தன ரன்பற்ற நானினி யேதுசெய்வேன்
கொல்லா விரதியர் நேர்நின்ற முக்கட் குருமணியே.

அந்தணர் நால்வர் காண வருட்குரு வாகி வந்த
எந்தையே எல்லாந் தானென் றியம்பினுய் எமைப் படைத்த
தந்தைநீ யெம்மைக் காக்குந் தலைவனே நுந்தை யன்றோ
பந்தமில் சித்தி முத்தி படைக்கநின் னருள்பா லிப்பாய்.



தாயினு மினிய நின்னைச் சரணென வடைந்த நாயேன்
பேயினுங் கடைய னாகிப் பிதற்றுதல் செய்தல் நன்றோ
தீயிடை மெழுகாய் நொந்தேன் றெளிவிலேன் வீணே காலம்
போயின தாற்று கில்லேன் பூரணா னந்த வாழ்வே.

எண்ணிய வெண்ண மெல்லா மிறப்புமேற் பிறப்புக் காசை
பண்ணியெ னறிவை யெல்லாம் பாழாக்கி யெனைப்பா ழாக்குந்
திண்ணிய வினையைக் கொன்று சிறியனை உய்யக் கொண்டாற்
புண்ணிய நினக்கே யன்றோ பூரணா னந்த வாழ்வே.

உள்ளத்தி னுள்ளே யொளித்தென்னை யாட்டுகின்ற
கள்ளக் கருணையையான் காணுந் தரமாமோ
வெள்ளத்தை மாற்றி விடக்குண்பார் நஞ்சூட்டும்
பள்ளத்தின் மீன்போற் பதைத்தேன் பராபரமே.

உனக்குநா னடித்தொண் டாகி யுன்னடிக் கன்பு செய்ய
எனக்குநீ தோற்றி யஞ்சே லென்னுநா ளெந்த நாளோ
மனக்கிலே சங்க டீர்ந்த மாதவர்க் கிரண்டற் றோங்குந்
தனக்குநே ரில்லா வொன்றே சச்சிதா னந்த வாழ்வே.

---

## பராபரக்கண்ணி

திருச்சிற்றம்பலம்

சீராருந் தெய்வத் திருவருளாம் பூமிமுதற்
பாராதி யாண்ட பதியே பராபரமே.

பாராயோ வென்னைமுகம் பார்த்தொருகா லென்கவலை
தீராயோ வாய்திறந்து செப்பாய் பராபரமே.

ஓயாதோ வென்கவலை யுள்ளேயா னந்தவெள்ளம்
பாயாதோ வையா பகராய் பராபரமே.

எண்ணாதவெண்ணமெலா மெண்ணியெண்ணியேழைநெஞ்சம்
புண்ணாகச் செய்ததினிப் போதும் பராபரமே.

கொல்லா விரதங் குவலயமெல் லாமோங்க
எல்லார்க்குஞ் சொல்லுவதென் னிச்சை பராபரமே.

எவ்வுயிரு மென்னுயிர்போ லெண்ணி யிரங்கவும்நின்
தெய்வ வருட்கருணை செய்யாய் பராபரமே.

வித்தன்றி யாதும் விளைவதுண்டோ நின்னருளாஞ்
சித்தன்றி யாங்களுண்டோ செப்பாய் பராபரமே.

தன்னை யறிந்தாற் றலைவன்மேற் பற்றலது
பின்னையொரு பற்றுமுண்டோ பேசாய் பராபரமே.

வஞ்சநமன் வாதனைக்கும் வன்பிறவி வேதனைக்கும்
அஞ்சி யுனையடைந்தே னையா பராபரமே.

மார்க்கண்டர்க் காக மறலிபட்ட பாட்டையுன்னிப்
பார்க்கினன்பர்க் கென்ன பயங்காண் பராபரமே.

காயநிலை யல்லவென்று காண்பா ருறங்குவரோ
தூயவருட் பற்றுத் தொடர்வார் பராபரமே.

அன்பர்பணி செய்யவெனை யாளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே.

மூர்த்திதலந் தீர்த்த முறையாற் றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே.

விரும்புஞ் சரியைமுதன் மெய்ஞ்ஞான நான்கும்
அரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே.

சினமிறக்கக் கற்றாலுஞ் சித்தியெல்லாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே.

கொல்லா விரதமொன்று கொண்டவரே நல்லோர்மற்
றல்லாதார் யாரோ வறியேன் பராபரமே.

திருச்சிற்றம்பலம்.

## ஒன்பதாந் திருமுறை *

### திருவிசைப்பா—திருமாளிகைத்தேவர்

திருச்சிற்றம்பலம்

ஒளிவளர் விளக்கே யுலப்பிலா வொன்றே
யுணர்வுசூழ் கடந்ததோ ருணர்வே
தெளிவளர் பளிங்கின் றிரண்மணிக் குன்றே
சித்தத்துட் டித்திக்குந் தேனே
யளிவள ருள்ளத் தானந்தக் கனியே
யம்பல மாடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே.

இடர்கெடுத் தென்னை யாண்டுகொண் டென்னு
ளிருட்பிழம் பறவெறிந் தெழுந்த
சுடர்மணி விளக்கி னுள்ளொளி விளங்குந்
தூயநற் சோதியுட் சோதீ
யடல்விடைப் பாகா வம்பலக் கூத்தா
வயனொடு மாலறி யாமைப்
படரொளி பரப்பிப் பரந்துநின் றாயைத்
தொண்டனேன் பணியுமா பணியே.

### சேந்தனார்

கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியைக்
கரையிலாக் கருணைமா கடலை
மற்றவ ரறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்றவெஞ் சிவனைத்
திருவீழி மிழலைவீற் றிருந்த
கொற்றவன் றன்னைக் கண்டுகண் டுள்ளங்
குளிரவென் கண்குளிர்ந் தனவே.

திருச்சிற்றம்பலம்.

* இவை எட்டாந் திருமுறைக்குப்பின் பாராயணம் பண்ணப்பட வேண்டியன. தவறுதலால் முன் சேர்க்கப்படாது விடுபட்டன.

## திருப்பல்லாண்டு—சேந்தனார்

திருச்சிற்றம்பலம்.

மன்னுக தில்லை வளர்கநம் பத்தர்கள்
வஞ்சகர் போயகலப்
பொன்னின்செய் மண்டபத் துள்ளே புகுந்து
புவனியெல் லாம்விளங்க
வன்ன நடைமட வாளுமை கோனடி
யோமுக் கருள்புரிந்து
பின்னைப்பிறவி யறுக்க நெறிதந்த பித்தற்குப்
பல்லாண்டு கூறுதுமே

✓ மிண்டு மனத்தவர் போமின்கண் மெய்யடியார்கள்
விரைந்து வம்மின்
கொண்டுங் கொடுத்துங் குடிகுடி யீசற்
காட்செய்மின் குழாம்புகுந்
தண்டங் கடந்த பொருளள வில்லதோ
ரானந்த வெள்ளப்பொருள்
பண்டு மின்று மென்றுமுள்ள பொருளென்றே
பல்லாண்டு கூறுதுமே.

பாலுக்குப் பாலகன் வேண்டி யழுதிடப்
பாற்கட லீந்தபிரான்
மாலுக்குச் சக்கர மன்றருள் செய்தவன்
மன்னிய தில்லைதன்னு
ளாலிக்கு மந்தணர் வாழ்கின்ற சிற்றம்
பலமே யிடமாகப்
பாலித்து நட்டம் பயிலவல் லானுக்கே
பல்லாண்டு கூறுதுமே.

திருச்சிற்றம்பலம்.

# பத்தாந்திருமுறை

## திருமந்திரம்—திருமூலநாயனார்

திருச்சிற்றம்பலம்.

அப்பனை நந்தியை வாரா வமுதினை
ஒப்பிலி வள்ளலை யூழி முதல்வனை
எப்பரி சாயினு மேத்துமி னேத்தினால்
அப்பரி சீச னருள்பெற லாமே.

பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்
பெறுதற் கரிய பிரானடி பேணார்
பெறுதற் கரிய பிராணிக ளெல்லாம்
பெறுதற் கரியதோர் பேறிழந் தாரே.

அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே

சிவசிவ வென்கிலார் தீவினை யாளர்
சிவசிவ வென்றிடத் தீவினை மாளும்
சிவசிவ வென்றிடத் தேவரு மாவர்
சிவசிவ வென்றிடச் சிவகதி தானே.

யாவர்க்கு மாமிறை வர்க்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை
யாவர்க்கு மாமுண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே.

என்பே விறகா யிறைச்சி யறுத்திட்டு
பொன்போற் கனலில் பொரிய வறுக்கினும்
அன்போ டுருகி யகங்குழை வார்க்கன்றி
என்பொன் மணியை யெய்தவொண் ணாதே.

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயமாம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே.

தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
செந்நியில் வைத்த சிவனரு ளாலே.

உடம்பினை முன்ன மிழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்பிலே யுத்தமன் கோயில்கொண் டானென
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே

முன்னை அறிவினிற் செய்த முதுதவம்
பின்னை அறிவினைப் பெற்று லறியலார்
தன்னை அறிவது அறிவாம் அஃதன்றிப்
பின்னை அறிவது பேயறி வாமே.

முகத்துக் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்துக் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே.

பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போல பசுபாச மனாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கில்பசு பாசநில் லாவே.

மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்
மானுட ராக்கை வடிவு சிதம்பரம்
மானுட ராக்கை வடிவு சதாசிவம்
மானுட ராக்கை வடிவு திருக்கூத்தே

தானே தனக்குப் பகைவனும் நட்டானுந்
தானே தனக்கு மறுமையும் இம்மையுந்
தானே தான்செய்த வினைப்பயன் துய்ப்பானுந்
தானே தனக்குத் தலைவனு மாமே.

திருச்சிற்றம்பலம்.



# பதினொராந்திருமுறை

## காரைக்காலம்மையார்

திருச்சிற்றம்பலம்.

காண்பார்க்குங் காணலாந் தன்மையனே கைதொழுது
காண்பார்க்குங் காணலாங் காதலாற் — காண்பார்க்குச்
சோதியாய்ச சிந்தையுளே தோன்றுமே தொல்லுலகுக்
காதியாய் நின்ற அரன்.

அறிவானுந் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்றான் தானே — அறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்பார் ஆகாயம்
அப்பொருளுந் தானே அவன்.

## சேரமான்பெருமாள்நாயனார்

சிந்தனை செய்ய மனம்அமைத் தேன்செப்ப நாஅமைத்தேன்
வந்தனை செய்யத் தலையமைத் தேன்கை தொழஅமைத்தேன்
பந்தனை செய்வதற் கன்பமைத் தேன்மெய் அரும்பவைத்தேன்
வெந்தவெண் ணீறணி யீசற் கிவையான் விதித்தனவே.

பொய்யா நரகம் புகினுந் துறக்கினும் போந்துபுக்கிங்
குய்யா வுடம்பினொ டோர்வ நடப்ப பறப்பஎன்று
நையா விளியினும் நானிலம ஆளினும் நான்மறைசேர்
மையார் மிடற்றான் அடிமற வாவரம் வேண்டுவனே.

திருச்சிற்றம்பலம்.

## பன்னிரண்டாந்திருமுறை

### பெரியபுராணம் —சேக்கிழார்

திருச்சிற்றம்பலம்.

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவ
னிலவு லாவிய நீர்மலி வேணிய
னலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள
வளப்பருங் கரணங்க ணான்கும்
சிந்தையே யாகக் குணமொரு மூன்றுந்
திருந்துசாத் துவிகமே யாக
விந்துவாழ் சடையா னாடுமா னந்த
வெல்லையி றனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத் துட் டிளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்.

கற்பனை கடந்த சோதி கருணையே யுருவ மாகி
யற்புதக் கோல நீடி யருமறைச் சிரத்தின் மேலாஞ்
சிற்பர வியோம மாகுந் திருச்சிற்றம் பலத்து ணின்று
பொற்புட னடஞ்செய் கின்ற பூங்கழல் போற்றி போற்றி.

தெண்ணிலா மலர்ந்த வேணியா யுன்றன்
றிருநடங் கும்பிடப் பெற்று
மண்ணிலே வந்த பிறவியே யெனக்கு
வாலிதா மின்பமா மென்று
கண்ணிலா னந்த வருவிநீர் சொரியக்
கைமல ருச்சிமேற் குவித்து
பண்ணினா னீடி யறிவரும் பதிகம்
பாடினார் பரவினார் பணிந்தார்.



சொல்லுவ தறியேன் வாழி தோற்றிய தோற்றம் போற்றி
வல்லைவந் தருளியென்னை வழித்தொண்டுகொண்டாய்போற்றி
யெல்லையி லின்ப வெள்ள மெனக்கருள் செய்தாய் போற்றி
தில்லையம் பலத்து ளாடுஞ் சேவடி போற்றி யென்ன.

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.

திருச்சிற்றம்பலம்.

## திருநந்திதேவர் சிவபெருமானிடத்திற் கேட்டுக்கொண்ட சில வரங்கள்

ஆமளவும் சிவமறவா திருத்தல் வேண்டும்
அடியேன்தன் விண்ணப்பம் ஆக்கம் முத்தி
சாமளவுஞ் சஞ்சலமற் றிருத்தல் வேண்டும்
சாம்பொழுது நோயின்றிச் சாதல் வேண்டும்
போமளவில் நாயடியேற் கெதிரே வந்து
புகுந்தாயோ வெனவெண்ணிப் புகுந்த போது
கோமளவல் லியுநீயும் இருக்குங் கோலம்
கும்பிடநான் வரவேண்டுங் கூத்த னுரே.

## கருவலம்வந்த நல்லூரிலிருந்த வரகுண பாண்டியன் குமாரத்தி சிவபெருமான்மீது பாடிய செய்யுள்

ஆக்கையெனும் புழுக்குரம்பை யணைந்தணையாப் பொருளை
அருளொளியைப் பராபரத்துக் கப்புறமா மறிவை
நீக்கமற மயிர்முனைக்கு மிடமறஎங் கெங்கும்
நிறைந்துநின்ற முழுமுதலை நினைவிலெழும் சுடரைப்
பாக்கியங்கள் செய்தனந்தம் தவக்குறைகள் முடிக்கும்
பழவடியார் தமக்குதவும் பசுந்துணர்க்கற் பகத்தை
வாக்குமன விகற்பத்தா லளவுபடா வொன்றை
மாசற்ற வெறுவெளியை மனவெளியி லடைப்பாம்

திருச்சிற்றம்பலம்.

## சில தேவாரங்களும் அவற்றின் பொழிப்புரைகளும்

1. காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
நாத னாம நமச்சி வாயவே.

(இ - ள்.) பேரன்பு மிகுந்து உள்ளம் நெகிழ்ந்து, கண்கள் நீர் நிறைந்து, ஓதுகின்ற மெய்யடியார்களை சாதனை நிறைந்த நல்வழியிலே செலுத்துவதும், நான்கு வேதத்திலும் எடுத்து விளக்கப்படும் மெய்ப்பொருளாயிருப்பதும் சிவபெருமானது திருநாமமாகிய நமசிவாய என்னும் பஞ்சாக்கரமே. (எ - று.)

2. வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

(இ - ள்.) பிராமணோத்தமர்களும், தேவர்களும், பசுக்கூட்டங்களும் வாழுக! குளிர்ந்த மழையானது சொரிவதாக! அரசனும் உயர்ச்சியடைக! தீயநெறிகளெல்லாம் தாழ்வடைகுக! சிவபெருமானது திருநாமமே எங்கும் பரவுவதாக! உலகினுள்ள உயிரியாவும் துன்பங்களினின்றும் நீங்குக. (எ - று.)

3. நன்றுடை யானைத் தீயதி லானை நரைவெள்ளே
றொன்றுடை யானை யுமையொரு பாக முடையானைச்
சென்றடை யாத திருவுடை யானைச் சிராப்பள்ளிக்
குன்றுடை யானைக் கூறவென் னுள்ளங் குளிருமே.

(இ - ள்.) தம்மை வழிபடுகின்ற அன்பர்க்கு நன்மை தருபவனை, தீமையில்லாமற் செய்பவனை, மிகுந்த வெண்மையினையுடைய ஒப்பற்ற இடபத்தை வாகனமாக உடையவனை, உமாதேவியாரை ஒருபாகத்தில் உடையவனை, தாம் விரும்பித் தேடாத அழகும் செல்வமும் உடையவனை, திருச்சிராப்பள்ளி மலையைத் தமக்கு இடமாக உடையவனை எடுத்துப் பேசும்போதெல்லாம் எனது உள்ளம் குளிருமே. (எ - று.)

4. மானி னேர்விழி மாத ராய்வழு திக்கு மாபெருந் தேவிகேள்
பானல் வாயொரு பால னீங்கிவ னென்று நீபரி வெய்திடேல்
ஆனை மாமலை யாதி யாயவி டங்க ளிற்பல வல்லல்சேர்
ஈனர் கட்கெளி யேன லேன்திரு வால வாயர னிற்கவே.

(இ - ள்.) மானைப்போலும் பார்வையையுடைய பெண்ணே! பாண்டியனுக்குப் பெருந் தேவியாயுள்ளவளே, கேட்பாயாக: இவன் பால் மணம் மாருத நல்ல வாயினையுடைய ஒரு சிறுவனென்று எண்ணி நீ வருந்தற்க. ஆனை மலை முதலியவிடங்களில் இருக்கின்ற பல துன்பங்களைச் செய்கின்ற இழிந்த சமணர்களுக்கு நான் இளைத்தவனல்லன்; மதுரையின்கண்ணே எழுந்தருளியிருக்கின்ற சிவபிரான் எமக்கு உறுதுணையாய் முன்னிற்றலால். (எ-று)

5. பித்தாபிறை சூடிபெரு மானேயரு ளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்
அத்தாவுனக் காளாயினி யல்லேனென லாமே. [டுறையுள்

(இ - ள்.) பித்தனே, பிறையணிந்தவனே, பெருமையுடையவனே, அருளாளனே, எவ்வகையாலும் மறவாமலே நினையாநிற்பவனாகிய எனது மனத்தில் உன்னை இருத்தினவனே, பெண்ணையாற்றின் தென்திசையிலுள்ள திருவெண்ணெய் நல்லூரிலுள்ள திருவருட்டுறை என்னுங் கோயிலுள் எழுந்தருளிய அத்தனே! முன்னமே அடிமையாளனாகியும் நான் அங்ஙனமல்லனென இனி மறுத்தல் கூடுமோ. (எ - று.)

6. விரையார் கொன்றையினாய் விடமுண்ட மிடற்றினனே
உரையார் பல்புகழா யுமைநங்கையோர் பங்குடையாய்
திரையார் தெண்கடல்சூழ் திருவான்மி யூருறையும்
அரையா வுன்னையல்லா லடையாதென தாதரவே.

(இ - ள்.) வாசனை நிறைந்த கொன்றை மாலையை யுடையவரே! ஆலகால விடத்தை யுண்டருளிய திருக்கண்டத்தை யுடையவரே! கற்று வல்லோரால் உரைக்கப்படும் நிறைந்த பல புகழை யுடையவரே! உமாதேவியை ஒருபாகத் துடையவரே! திரைகள் நிறைந்த கடலாற் சூழப்பெற்ற அழகிய திருவான்மியூரில் எழுந்தருளி யிருக்கின்ற தலைவரே! தேவரீரிடத்தன்றி எனது அன்பானது வேறொருவரிடத்தும் சேரமாட்டாது. (எ - று)



7. மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் றிருவால வாயான் றிருநீறே.

(இ - ள்.) எல்லா மந்திரங்களுமாயிருப்பதுவும், தேவர்களால் அணியப் பெறுவதும், அழகைச் செய்வதும், எவராலும் போற்றப்படுவதும், முத்திக்கு உபாயமானதும், ஏற்ற தருணத்தில் உதவியாயுள்ளதுமாகும். சிவந்த பவளம்போலும் திருவாயினையுடைய உமாதேவியாரை வாமபாகத்தி லுடையவராகிய திருவாலவாயின்கண்ணே வீற்றிருக்கும் சோமசுந்தரக் கடவுளுடையதுமாகிய திருநீறாகிய அதுவே. (எ . று.)

மந்திரம் என்பதற்கு வேத மந்திரமென்று பொருள் கூறி, தந்திர மென்பதற்கு ஆகமம் என்றும், சமயம் என்பதற்கு சைவ சமயம் என்றும் பொருள் கூறலாம்.

நீறு பாவங்களை நீக்கியருளும் சிவனது திருவருட் பிரகாசம்.

8. சடையா யெனுமால் சரணீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ விவளுண் மெலிவே.

(இ-ள். ) திருச்சடையை யுடையவரே யென்பாள்; நீயே எனக்குப் புகலிடம் என்பாள்; இடபத்தை யுடைய கடவுளே என்பாள், அஞ்சிக் கீழே விழுவாள், நீர்மடைகளிலே குவளை மலர்கள் மலருகின்ற திருமருகலைப் பதியாகக்கொண்டு எழுந்தருளிய தேவரீருக்கு இவளது உள்ளத் தளர்ச்சி தகுவதாகுமோ. (எ-று.)

9. சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே.

(இ - ள்.) தம்மாற் சொல்லப்பட்ட எமக்குத் துணையாயுள்ள வேதங்களை யுடையவனும், சோதிவடிவாயுள்ள தேவனும் ஆகிய அவனது பொன்போன்ற திருத்தமாகிய இரண்டு திருவடிகளை பொருத்தமுறக் கைகுவித்து வணங்கலால், கல்லைத் துணையாகக் கொண்டு அதனுடன் சேர்த்துக்கட்டி என்னைக் கடலின்கண் விடினும் நமக்கு நல்ல துணையாவது திருவைந்தெழுத்தேயாம். (எ - று.)

10. வீடலால வாயிலாய் விழுமியார்க ணின்கழல்
பாடலால வாயிலாய் பரவநின்ற பண்பனே
காடலால வாயிலாய் கபாலிநீள்க டிம்மதில்
கூடலால வாயிலாய் குலாயதென்ன கொள்கையே

(இ - ள்.) ஒழுக்கத்திற் சிறந்த மேலோர்கள், வீடன்றி வேறு ஒன்றையும் அவாவி இல்லாது (அவாவாது) தேவரீரது திருவடிகளைப் பாடுதலோடு ஆலவாயென்னும் அக்கோயிலின் வாயிலிலே வந்து துதிக்கும்படியான குணத்தை யுடையவரே! கூத்தாடுவதற்குக் காடு அல்லாமல் வேறு அழகிய இடம் இல்லாதவரே! பிரமகபாலத்தை ஏந்தியிருக்கின்றவரே! நீண்ட காவலையுடைய மதில் சூழப்பெற்ற மதுரையின்கண்ணேயுள்ள திருவாலவாயென்னுந் திருப்பதியில் வீற்றிருப்பவரே! நீர் அங்கே விளங்கியது எவ் வியல்பினதாயிருக்கின்றது. (எ - று.)

11. உண்ணாமுலை யுமையாளொடு முடனாகிய வொருவன்
பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ
மண்ணார்ந்தன வருவித்திரண் மழலைம்முழ வதிரும்
அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவண்ண மறுமே.

(இ - ள்.) முன்னொருகாலத்தில் பெண் வடிவத்தைக்கொண்ட பெரிய விஷ்ணுவானவர் தேடிக்காணாது மலைக்கப்பெற்றதும், தன்னிடத்தே அழகிய பெரிய மாணிக்கங்கள் பிரகாசிக்க பூமியில் வீழ்ந்து நிறைந்தனவாய அருவிக்கூட்டங்கள் இனிய ஓசையைத் தரும் முழவுபோல் ஒலிக்கின்றதுமாகிய உண்ணாமுலையம்மையெனப் பேர்பெற்ற உமாதேவியோடு கலந்திருக்கின்ற ஒப்பற்றவராகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற அண்ணாமலை யென்கின்ற, திருத்தலத்தைத் தொழுகின்றவர்களுடைய இருவினைகளும் தவறாமல் ஒழியும். (எ - று.)

ஒருவன் அண்ணாமலையெனவும், பெருமான்மலை அண்ணாமலை யெனவும், அதிரும் அண்ணாமலை யெனவும் தனித்தனி கூட்டி முடிக்க.

12. நீறு சேர்வதோர் மேனியர் நேரிழை
கூறு சேர்வதோர் கோலமாய்ப்
பாறு சேர்தலைக் கையர் பராய்த்துறை
ஆறு சேர்சடை யண்ணலே.

(இ - ள்.) திருப்பராய்த்துறை யென்னும், திவ்விய தலத்தில் எழுந்தருளியிருக்கும் கங்கையைத் தரித்த சடையையுடைய சிவ



பெருமான், விபூதியைப் பரவப் பூசிய ஒப்பற்ற திருமேனியையுடையவர், நேர்மையான ஆபரணங்களை அணிந்த உமாதேவியார் தமது வாமபாகத்திற் பொருந்தப்பெற்ற ஒப்பற்ற வடிவினராகி பருந்துகள் பொருந்தும் பிரமாவினுடைய கபாலத்தைக் கையிலேந்தியவர். (எ - று.)

13. மற்றுப் பற்றெனக் கின்றி நின்றிருப்
பாதமே மனம் பாவித்தேன்
பெற்றலும் பிறந் தேனினிப் பிற
வாத தன்மைவந் தெய்தினேன்
கற்றவர் தொழு தேத்துஞ் சீர்க்கறை
யூரிற் பாண்டிக் கொடுமுடி
நற்றவா வுனை நான்மறக் கினுஞ்
சொல்லுநா நமச்சி வாயவே.

(இ - ள்.) கற்றவர்கள் வணங்கித் துதிக்கின்ற சிறப்பமைந்த திருக்கறையூரின்கண்ணேயுள்ள திருப்பாண்டிக் கொடுமுடி யென்னும் க்ஷேத்திரத்திலே வீற்றிருக்கும் நல்லநாதனே, எனக்கு வேறு பற்றில்லாமல் உமது திருவடியையே, பற்றுகக்கொண்டு மனதிற் பாவனைசெய்தேன். அங்ஙனம் பாவனை செய்யப் பெறுதலும், பிறந்ததின் பயனை யடைந்தவனானேன்; இனிமேல் பிறவாத தன்மையையும் அடைந்தேன்; நான் உம்மை மறந்தாலும் என் நாவானது உமது பஞ்சாட்சரத்தையே உச்சரித்துக்கொண்டிருக்கும். (எ - று.)

14. இறைகளோ டிசைந்த வின்ப
மின்பத்தோ டிசைந்த வாழ்வு
பறைகிழித் தனைய போர்வை
பற்றியா னோக்கி னேற்குத்
திறைகொணர்ந் தீண்டித் தேவர்
செம்பொனு மணியும் தூவி
அறைகழ லிறைஞ்சு மாரூ
ரப்பனே அஞ்சி னேனே.

(இ - ள்.) தேவர்கள் வணங்கும் திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் அப்பனே! அரசர்களோடு தொடர்புபட்டு அனுபவிக்கும் இன்பமும், அவ்வின்பத்தோடு கூடிய ஆடம்பரவாழ்வும், அவற்றை ஆராய்ந்து பார்த்த எனக்கு பறையில் மூடப்பெற்ற தோலைக் கிழித்துவிட்டால் அது பயனில்லாதுபோல, பயனில்லாதனவாம் என்று தெரிந்து அஞ்சினேன். (எ - று.)

15. தொண்டரஞ்சு களிறுமடக்கிச் சுரும்பார் மலர்
இண்டைகட்டி வழிபாடு செய்யுமிட மென்பரால்
வண்டுபாட மயிலால மான்கன்று துள்ளவரிக்
கெண்டைபாயச் சுனைநீல மொட்டலருங் கேதாரமே.

(இ - ள்.) சிவனடியார்கள் ஐம்புலக் களிற்றையும் அடக்கி வண்டுகள் ஒலிக்கின்ற பூக்களினாலே இண்டை மாலையைக் கட்டி வழிபடுவதற்குரிய இடம் எதுவெனில்? வண்டுகள் இசைபாட, மயில்கள் ஆட, மான்கன்றுகள் துள்ள, வரிகளையுடைய கெண்டை மச்சங்கள் பாய்ந்து விளையாடலால் நீர்நிறைந்த சுனைகளிலே நீலோற்பல மொட்டுகள் அலரும் திருக்கேதாரமென்னும் திவ்விய ஸ்தலமென்று சொல்லுவார். (எ - று)

16. உற்றுமை சேர்வது மெய்யினையே
யுணர்வது நின்னருண் மெய்யினையே
கற்றவர் காய்வது காமனையே
கனல்விழி காய்வது காமனையே
அற்ற மறைப்பது முன்பணியே
யமரர்கள் செய்வது முன்பணியே
பெற்று முகந்தது கந்தனையே
பிரம புரத்தையு கந்தனையே.

(இ - ள்.) உமாதேவியார் பொருந்தியிருப்பது உமது திருமேனியையே; அன்பர்கள் அறிவது தேவரீரது திருவருள் உண்மையினையே; அறிஞர்கள் வெறுப்பது கற்பகச் சோலைக்கு இடமாகிய சுவர்க்கலோகம் முதலான பதவிகளையே, தேவரீரது அக்கினிக்கண் எரித்தது மன்மதனையே, உமது மூன்னுள்ள இரகசியத்தானத்தைமறைப்பதும் சர்ப்பமே, தேவர்கள் செய்வதும் தேவரீரது திருப்பணியையே, நீர் பிள்ளையாகப் பெற்று மகிழ்ந்ததும் குமாரக் கடவுளையே, இத்தன்மைகளையுடைய நீர் சீர்காழியை உமக் கிருப்பிடமாக விரும்பி இருந்தருளினீர். (எ - று.)

17. வானுலா வும்மதி வந்துலா வும்மதின் மாளிகை
தேனுலா வும்மலர்ச் சோலைமல் குந்திகழ் சிக்கலுள்
வேனல்வே ளைவிழித் திட்டவெண் ணெய்ப்பெரு மானடி
ஞானமா கந்நினை வார்வினை யாயின நையுமே.

(இ - ள்.) ஆகாயத்தில் சஞ்சரிக்கும் சந்திரன் வந்து தன்மேற் சஞ்சரிக்கின்ற மதில் சூழ்ந்த மாளிகைகளும, வண்டுகள் உலாவும் மலர்களையுடைய சோலைகளும் நிறைந்திருக்கின்றதாகிய விளங்கு



கின்ற திருச்சிக்கல் என்னுந் தலத்தின்கண் எழுந்தருளியிருக்கும் வேனிற்காலத்துக்குரிய தலைவனான மதனனை நெற்றிக்கண்ணாலே பார்த்து நீருக்கியருளிய நவநீதநாதரது திருவடிகளைத் தமது அறிவாக வைத்துச் சிந்திப்பவர்களது இருவினைகளும் நீங்கி ஒழியும். (எ - று.)

வெண்ணெய்=நவநீதம். வெண்ணெய்ப் பெருமான் தமிழ்ப் பெயர். நவநீதநாதனுர், வடமொழிப் பெயர்.

18. மாதர்ம டப்பிடியும் மட வன்னமு மன்னதோர்
நடை யுடைம் மலை மக டுணையென மகிழ்வர்
பூதவி னப்படைநின் றிசை பாடவு மாடுவ
ரவர் படர் சடைந் நெடு முடியதொர் புனலர்
வேதமொ டேழிசைபா டுவ ராழ்கடல் வெண்டிரை
யிரைந் நுரை கரை பொரு துவிம்மிநின் றயலே
தாதவிழ் புன்னை தயங் குமலர்ச்சிறை வண்டறை
யெழில் பொழில் குயில் பயி றருமபு ரம்பதியே.

(இ - ள்) அளகும் இளமையும் உள்ள பெண்யானையையும் இள அன்னத்தையும்போன்ற ஒப்பற்ற நடையையுடைய மலையரசன் புதல்வியாகிய உமாதேவியாரைத் தமக்குத் துணையாக மகிழ்பவரும், கூட்டமாகிய பூதசேனைகள் நின்று இசைகளைப்பாட திருநடனஞ்செய்பவரும், விளங்குகின்ற படர்ந்த நீண்ட சடைமுடியிலே ஒப்பற்ற கங்கை நீரை அணிந்தவரும், வேதங்களோடு கூடிய ஏழிசையும் பாடுபவரும் ஆகிய சிவபெருமானுடைய பதி எதுவெனில், ஆழ்ந்த சமுத்திரத்திலுள்ள வெள்ளிய திரையானது ஒலித்து நுரையோடு கரையிலே மோதி சத்தமிட்டுநிற்க பக்கத்திலே மகரந்தம் சொரியப்பெற்ற புன்னைமரம் விளங்குகின்ற பூவிலுள்ள வண்டுகள் பாடும் அழகிய சோலையின்கண்ணே குயில்கள் சஞ்சரிக்கப்பெற்ற திருத்தருமபுரமென்னும் திவ்விய தலமே. (எ - று) தயங்குபொழில் என இயையும்.

19. மருந்தவை மந்திர மறுமைநன்
னெறியவை மற்றுமெல்லாம்
அருந்துயர் கெடுமவர் நாமமே
சிந்தைசெய் நன்னெஞ்சமே
பொருந்துதண் புறவினிற் கொன்றைபொன்
சொரிதரத் துன்றுபைம்பூம்
செருந்திசெம் பொன்மலர்த் திருநெல்வேலி
யுறை செல்வர்தாமே.

(இ - ள்) குளிர்ச்சி பொருந்திய நிலத்திலே கொன்றைமரங்கள், மலர்களாகிய பொன்னைச் சொரிய, நெருங்கிய பசிய செருந்தி மரங்களும் அவற்றிற்கெதிராக பொன்னைப் பூக்கின்ற திருநெல்வேலி என்னும் தலத்தின்கண் எழுந்தருளியிருக்கும் அருட்செல்வராகிய அவ்வேணுவன நாதருடைய நாமத்தையே நல்லமனமே சிந்தை செய்வாய். செய்யின் நீங்குதற்கரிய துன்பமும் நீங்கும். அவர் நாமங்களே மருந்து, அவையே மந்திரம், அவையே மறுமைக்குரிய நல்ல வழியும் பிறவும் எல்லாம் ஆகும். (எ - று.)

20. நிரைகழ லரவஞ் சிலம்பொலி யலம்பு
நிமலர்நீ றணிதிரு மேனி
வரைகெழு மகளோர் பாகமாப் புணர்ந்த
வடிவினர் கொடியணி விடையர்
கரைகெழு சந்துங் காரகிற் பிளவு
மளப்பருங் கனமணி வரன்றிக்
குரைகட லோத நித்திலங் கொழிக்குங்
கோணமா மலையமர்ந் தாரே.

(இ - ள்) கரையின்கண்ணே வந்து கெழுமியுள்ள சந்தனக் கட்டைகளையும் அகிலந் துண்டுகளையும் அளவில்லாத சிறந்த மாணிக்கங்களையும் வாரிக்கொண்டு ஒலிக்கின்ற பெரிய கடலிலுள்ள திரை முத்துக்களைச் சிந்துகின்ற கோணமலை யென்னும் திவ்விய தலத்தைத் தனக்கு இடமாக விரும்பி யிருக்குங் கடவுள் நிரையாக உள்ள வீரக்கழலினது ஓசையும் சிலம்பினொலியும் சப்திக்கின்ற திருவடிகளையுடைய மலரகிதர்; திருநீறணியப்பட்ட திருமேனியின்கண்ணே மலையரசன் புதல்வியாகிய உமாதேவியார் ஒரு பாகத்திற் சேர்ந்திருக்கின்ற திருவடிவத்தை யுடையவர்; அழகிய இடபக்கொடியை யுடையவர். (எ - று.)

21 கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில
சொல்லூர்ப் பெருமணஞ் சூடலரே தொண்டர்
நல்லூர்ப் பெருமண மேயநம் பானே.

(இ - ள்) திருநல்லூர்ப் பெருமணத்தில் எழுந்தருளி யிருக்கின்ற சிவபெருமானே! அம்மியில் இவளது காலைத்தூக்கிப் பொருந்த வைத்தலையுடைய மணம் எனக்கு வேண்டா. ஏனெனில் கழுமலத்திலும் ஏனைய பல தலங்களிலும் பெரிய அருள்மணத்தைச் செய்கின்ற எனது தேவாரப்பாசுரங்கள் உண்மைப் பொருளுடையனவாகா; அன்றியும் போகத்தை விரும்பினவர்களுக்கு உரியதாக நூல்களில் சொல்லப்பட்டு; பரத்தலையுடைய பெரிய இல்வாழ்க்கையை அடியார்கள் மேற்கொள்ளமாட்டார்கள். (எ - று.)



22 எற்றான் மறக்கே னெழுமைக்கு மெம்பெரு மானையே
உற்றாயென் றுன்னையே யுள்குகின்றே னுணர்ந் துள்ளத்
புற்றா டரவா புக்கொளி யூரவி நாசியே [தால்
பற்றாக வாழ்வேன் பசுபதியே பர மேட்டியே.

(இ - ள்) எழுபிறப்பிலும் எம்பெருமானாகிய உம்மையே எனக்கு உறவினனென்று மனதினால் உணர்ந்து உம்மையே எப்பொழுதும் நினைக்கின்றேன். புற்றின்கண்ணே வசிக்கின்ற சர்ப்பத்தை ஆபரணமாக உடையவரே! திருப்புக்கொளியூரில் எழுந்தருளியிருக்கும் அவிநாசி அப்பரே! பசுபதியே! பரமேட்டியே! உம்மையே பற்றாகக்கொண்டு வாழுபவனாகிய யான், வேறு எக்காரணத்தால் உம்மை மறப்பேன். (எ - று.)

23. உரைப்பா ருரையுகந் துள்கவல் லார்தங்க ளுச்சியாய்
அரைக்கா டரவா வாதியு மந்தமு மாயினாய்
புரைக்காடு சோலைப் புக்கொளியூ ரவிநாசியே
கரைக்கான்முதலையைப்பிள்ளை தரச்சொல்லுகாலனையே.

(இ - ள்) உன்னைப் புகழ்ந்து சொல்லுபவர்களது சொற்களுக்கு மகிழ்ந்து நினைக்க வல்லவர்களுடைய உச்சியின்மேற் காணப்படுபவரே! அரையிற் கட்டியுள்ள ஆடும் சர்ப்பத்தையுடையவரே! ஆதியும் அந்தமும் ஆனவரே! பெரிய சோலைகள் சூழ்ந்த திருப்புக்கொளியூர் அவிநாசி அப்பரே! முதலை முன் உண்ட பிள்ளையை அம்முதலையைக்கொண்டு தருவிக்கும்படி காலனிடம் சொல்வீராக. (எ - று.)

முதலையை இடமாகக்கொண்டு பிள்ளையைத் தரக் காலனிடம் சொல்வீராக எனினுமாம்.

திருச்சிற்றம்பலம்

## திருக்கேதீச்சரப் பதிகங்கள் *

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

திருச்சிற்றம்பலம்.

1. **விருது குன்றமா மேருவி னாணர**
**வாவன வெரியம்பாப்**
**பொருது மூவெயில் செற்றவன் பற்றிநின்**
**றுறைபதி யெந்நாளுங்**
**கருது கின்றவூர் கனைகடற் கடிகமழ்**
**பொழிலணி மாதோட்டங்**
**கருத நின்றகே தீச்சரங் கைதொழக்**
**கடுவினை யடையாவே.**

**(இ - ள்)** திரிபுரத்திலுள்ளோர்கள் தாங்கொண்ட வெற்றி கெட மகாமேரு வில்லாகவும், சேஷன் நாணாகவுங்கொண்டு சுடுகின்ற அக்கினியாகிய அம்பினாலே போர்செய்து அவற்றை அழித்த சிவபெருமான் விரும்பி வீற்றிருக்கும் இடமாக எந்நாளும் நினைக்கப்படுகின்ற ஊராகிய முழங்குகின்ற கடல்சூழ்ந்த வாசனை கமழுஞ் சோலைசெறிந்த மாதோட்டத்திலே எவரும் மதிக்கும்படி உள்ள திருக்கேதீச்சர மென்னுந் தலத்தை வணங்கினோரைத் தீவினைகள் சேரா. (எ - று.)

2. **பாடல் வீணையர் பலபல சரிதைய**
**ரெருதுகைத் தருநட்டம்**
**ஆடல் பேணுவ ரமரர்கள் வேண்டநஞ்**
**சுண்டிருள் கண்டத்தர்**
**ஈட மாவது விருங்கடற் கரையினி**
**லெழிறிகழ் மாதோட்டம்**
**கேடி லாதகே தீச்சரந் தொழுதெழக்**
**கெடுமிடர் வினைதானே.**

**(இ - ள்)** பாடுகின்ற வீணையையுடையவரும், பலபல ஒழுக்கத்தையுடையவரும், தருமதேவதையாகிய இடபத்தைச் செலுத்திப் படைத்தல், காத்தல் அழித்தல், மறைத்தல், அருளல் என்கின்ற ஐந்தொழிலாகிய அரிய நடனத்தை விரும்புகின்றவரும், தேவர்கள் முறையிட நஞ்சையுண்டு இருண்ட கண்டத்தையுடைய

*திருக்கேதிச்சரப் பதிகங்கள் இரண்டிற்கும், வித்துவ சிரோன்மணி ந. ச. பொன்னம்பலபிள்ளை அவர்கள் இயற்றிய பொழிப்புரைகள்.



வரும் ஆகிய சிவபெருமானுக்கு இடமாவது பெரிய கடற்கரையிற் பொருந்திய அழகு விளங்குகின்ற மாதோட்டத்திலுள்ள கேடில்லாத திருக்கேதீச்சர மென்னும் தலமாம்; அதனை வணங்கி எழ வருத்தத்தைச் செய்யும் தீவினைகளெல்லாம் கெடும் (எ - று.)

3. **பெண்ணொர் பாகத்தர் பிறைதவழ் சடையின**
**ரறைகழல் சிலம்பார்க்கச்**
**சுண்ண மாதரித் தாடுவர் பாடுவ**
**ரகந்தொறு மிடுபிச்சைக்**
**குண்ண லாவதோ ரிச்சையி னுழல்பவ**
**ருயர்தரு மாதோட்டத்**
**தண்ண னண்ணுகே தீச்சர மடைபவர்க்**
**கருவினை யடையாவே.**

**(இ - ள்)** தமது திருவருளாகிய சத்தியை ஒரு பாகத்திலுடையவரும், சுத்த ஞானமாகிய இளம் பிறை தவழும் சடையை யுடையவரும், நான்கு வேதங்களாகிய வீரக்கழலும் சிலம்பும் ஒலிக்க விபூதியை விரும்பி அணிபவரும், பற்பல கீதங்களைப்பாடுகின்றவரும் நிரீச்சுரவாதிகளாகிய முனிவர்களுக்கு ஈசுரன் ஒருவர் உண்டென்னும் உண்மையைப் புலப்படுத்தும் அருள் காரணமாக அவர்கள் வீடுகள் தோறும் இடுகின்ற பிச்சையை உண்ண வேண்டு மென்னும் விருப்பமுடையவர் போலச் சென்றவரும் ஆகிய சிவபெருமான் வீற்றிருக்கின்ற உயர்ந்தமாதோட்டத்திலுள்ள திருக்கேதீச்சரமென்னுந் தலத்தை அடைபவர்களைத் தீவினையடையா. (எ . று.)

4. **பொடிகொண் மேனியர் புலியதள ரையினர்**
**விரிதரு கரத்தேந்தும்**
**வடிகொண் மூவிலை வேலினர் நூலினர்**
**மறிகடன் மாதோட்டத்**
**தடிக ளாதரித் திருந்தகே தீச்சரம்**
**பரிந்த சிந்தையராகி**
**முடிகள் சாய்த்தடி பேணவல்லார் தம்மேன்**
**மொய்த்தெழும் வினைபோமே.**

**(இ - ள்)** விபூதியை அணிந்த திருமேனியை உடையவரும், புலித்தோலை உடுத்த அரையை உடையவரும், விரிந்த கையிலேந்துகின்ற கூரிய இச்சை ஞானம் கிரியை என்னும் முத்தலைச் சூலத்தையுடையவரும், உபவீதத்தை யுடையவருமாகிய சிவபெருமான் விரும்பி வீற்றிருந்த திரை பொருகின்ற கடல்சூழ்ந்த மாதோட்

டத்திலுள்ள திருக்கேதீச்சரத்திலே அன்புகொண்ட மனத்தையுடையராகித் தலைகளைச் சாய்த்து அப்பெருமானுடைய பாதங்களை வணங்க வல்ல தொண்டர் மேலே திரண்டெழுகின்ற தீவினைகள் கெடும் (எ - று.)

5. நல்ல ராற்றவு ஞானநன் குடையர்தம்
மடைந்தவர்க் கருளிய
வல்லர் பார்மிசை வான்பிறப் பிறப்பிலர்
மலிகடன் மாதோட்டத்
தெல்லை யில்புக ழெந்தைகே தீச்சர
மிராப்பக லினைந்தேத்தி
அல்ல லாசறுத் தரனடி யிணைதொழு
மன்பரா மடியாரே.

(இ - ள்) மிகவும் நன்மையை உடையவரும், ஞானத்தை மிக உடையவரும், தம்மையடைந்த அன்பர்களுக்கு அருளைச் செய்ய வல்லவரும், உலகத்திலுள்ள பெரிய பிறப்பிறப்பில்லாதவரும் ஆகிய அளவிறந்த புகழையுடைய சிவபெருமானது வளங்கள் நிறைந்த கடல் சூழ்ந்த மாதோட்டத்திலுள்ள திருக்கேதீச்சரமெனுந் தலத்தை இரவும் பகலுஞ் சிந்தித்துத் துதித்துத் துக்கத்தை முழுதுங் கெடுத்து அப்பெருமானது இரு பாதங்களையும் வணங்கும் அன்பர்களே சிவனடியார் என்று சொல்லப்படுவர் (எ—று.)

6. பேழை வார்சடைப் பெருந்திரு மகடனைப்
பொருந்தவைத் தொருபாகம்
மாழை யங்கயற் கண்ணிபா லருளிய
பொருளினர் குடிவாழ்க்கை
வாழை யம்பொழின் மந்திகள் களிப்புற
மருவிய மாதோட்டக்
கேழல் வெண்மருப் பணிந்தநீண் மார்பர்கே
தீச்சரம் பிரியாரே.

(இ - ள்) பரந்து உயர்ந்த பெட்டிபோன்ற சடாமுடியிலே பெரிய கங்கையைப் பொருந்தும்படி வைத்து, ஒரு பாகத்தை அருட்சத்திக்குக் கொடுத்த கொள்கையை உடையவரும், விஷ்ணுவாகிய பன்றியினது எயிற்றை அணிந்த மார்பையுடையவருமாகிய சிவபெருமான், தமது இருப்பிடமாகிய வாழைச் சோலைகளிலே மந்திகள் மகிழ்ச்சி பெருக இருக்கின்ற மாதோட்டத்திலுள்ள திருக்கேதீச்சரமென்னுந் தலத்தை ஒருகாலத்தும் பிரியார். (எ—று.)



7. பண்டு நால்வருக் கறமுரைத் தருளிப்பல்
லுலகினி லுயிர்வாழ்க்கை
கண்ட நாதனா ர்கடலிடங் கைதொழக்
காதலித் துறைகோயில்
வண்டு பண்செயு மாமலர்ப் பொழின்மஞ்ஞை
நடமிடு மாதோட்டம்
தொண்டர் நாடொறுந் துதிசெய வருள்செய்கே
தீச்சர மதுதானே.

(இ - ள்) முற்காலத்திலே சனகாதி நால்வருக்கும் தருமங்களை உபதேசித்தருளி, பலவுலகங்களிலுமுள்ள ஆன்மாக்கள் அத்தருமங்களை மேற்கொண்டொழுகும்படி செய்த சிவபெருமான், உலகத்துள்ளார் வணங்க விரும்பி வீற்றிருக்கும் கோயில், வண்டுகள் கீதங்களைப் பாடும் பூஞ்சோலைகளில் மயில்கள் கூத்தாடுகின்ற மாதோட்டத்திலுள்ள அடியார்கள் நாடோறும் தோத்திரஞ்செய்ய அப்பெருமான் அவர்களுக்குத் திருவருள் செய்கின்ற திருக்கேதீச்சரமென்னுந் தலமாம். (எ - று.)

8. தென்னி லங்கையர் குலபதி மலைநலிந்
தெடுத்தவன் முடிதிண்டோள்
தன்ன லங்கெட வடர்த்தவற் கருள்செய்த
தலைவனார் கடல்வாயப்
பொன்னி லங்கிய முத்துமா மணிகளும்
பொருந்திய மாதோட்டத்
துன்னி யன்பொடு மடியவ ரிறைஞ்சுகே
தீச்சரத் துள்ளாரே.

(இ - ள்) கைலாசமென்னும் மலையை வருந்தி எடுத்த தெற்கின்கணுள்ள இலங்கையிலுள்ளார்க் கரசனாகிய இராவணனுடைய தலைகளும் வலிய புயங்களும் தத்தம் நிலைகெட நெரித்துப் பின் அவன் வேண்டுதல் செய்ய அருள் புரிந்த முதல்வர், கடலின்கணுள்ள பொன்னும் பிரகாசிக்கின்ற முத்துக்களும் மாணிக்கங்களும் செறிந்த மாதோட்டத்திலுள்ள, சிந்தித்து அன்போடு அடியார்கள் வணங்குகின்ற, திருக்கேதீச்சரமென்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானே! (எ - று.)

9. பூவு ளானுமப் பொருகடல் வண்ணனும்
புவியிடந் தெழுந்தோடி
மேவி நாடிநுன் னடியிணை காண்கிலா
வித்தக மென்னாகும்

மாவும் பூகமுங் கதலியு நெருங்குமா
தோட்டநன் னகர்மன்னித்
தேவி தன்னொடுந் திருந்துகே தீச்சரத்
திருந்தவெம் பெருமானே.

(இ - ள்) மாமரங்களும், கமுகுகளும், வாழைகளும் நெருங்கிய மாதோட்டமென்னும் நல்ல ஊரிலுள்ள திருக்கேதீச்சரமென்னுந் தலத்திலே, நிலையாய கௌரியம்பிகை என்னும் அருட் சத்தியோடு வீற்றிருக்கின்ற நமது கடவுளே! பிரமாவும் விஷ்ணுவும் முறையே அன்னமும் பன்றியுமாய் மேலே பறந்தும் பூமியைக் கிழித்தும் தேடித் தேவரீருடைய முடியையும் அடியையுங் காண்கின்றிலர். அவருடைய கடவுட்டன்மை எவ்வாறுகும்? (எ - று)

10. புத்த ராய்ச்சில புனைதுகி லுடையவர்
புறனுரைச் சமணுதர்
எத்த ராகிநின் றுண்பவ ரியம்பிய
வேழைமை கேளேன்மின்
மத்த யானையை மறுகிட வுரிசெய்து
போர்த்தவர் மாதோட்டத்
தத்தர் மன்னுபா லாவியின் கரையிற்கே
தீச்சர மடைமின்னே.

(இ - ள்) உலகத்திரே, புத்தசமயிகளாகிய சில தைத்த வஸ்திரங்களை அணிபவரும், புறங்கூறிப் பலரை வஞ்சித்துநின்று புசிக்கும் சமணர்களாகிய மூடர்களும் போதிக்கின்ற அறியாமையாகிய போதனையைக் கேளாதொழியுங்கள். மதயானையை அஞ்சும் படியுரித்து, அதன் தோலைப் போர்த்த சகத் பிதாவாகிய சிவபெருமான் வீற்றிருக்கின்ற மாதோட்டத்திலுள்ள பாலாவி யென்னும் தீர்த்தக்கரையிலிருக்கின்ற திருக்கேதீச்சர மென்னும் தலத்தை யடையுங்கள் (எ - று.)

11. மாடெ லாமண முரசெனக் கடலின
தொலிகவர் மாதோட்டத்
தாட லேறுடை யண்ணல்கே தீச்சரத்
தடிகளை யணிகாழி
நாடு ளார்க்கிறை ஞானசம் பந்தன்சொல்
நவின்றெழு பாமாலைப்
பாட லாயின பாடுமின் பத்தர்கள்
பரகதி பெறலாமே.



(இ - ள்) பக்கங்களிலெல்லாம் மணமுரசைப்போலக் கடலோசை பிறவோசைகளை அடக்கும் மாதோட்டத்திலுள்ள திருக்கேதீச்சரம் என்னும் தலத்தில் வீற்றிருக்கின்ற இடபாரூடராகிய சிவபெருமானைச் சீர்காழித் தலைவனுகிய திருஞானசம்பந்தன் பாடிய இப்பதிகத்தையே அன்பர்களே! நீங்கள் பாடுங்கள்; மோக்ஷத்தைப் பெற்றுக்கொள்ளலாம் (எ - று.)

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்தி நாயனுர்

திருச்சிற்றம்பலம்.

1. நத்தார்புடை ஞானன்பசு வேறிந்நனை கவிழ்வாய்
மத்தம்மத யானையுரி போர்த்தமழு வாளன்
பத்தாகிய தொண்டர்தொழு பாலாவியின் கரைமேல்
செத்தாரெலும் பணிவான்றிருக் கேதீச்சரத் தானே.

(இ - ள்) பாஞ்சசன்னிய மென்னும் சங்கை யேந்திய ஞானமாகிய விஷ்ணு வென்னும் இடபத்திலேறியவரும், மதத்தால் நனைகின்ற கதுப்புப் பொருந்திய வாயையுடைய யானைத்தோலை உரித்துப் போர்த்தவரும், மழுவாயுதத்தையுடையவரும், இறந்த விஷ்ணு முதலியோர்களுடைய என்பு மாலைகளையணிபவரும் யாவரென்றுல், அன்பையுடைய அடியார் வணங்குகின்ற பாலாவி யென்னுந் தீர்த்தக்கரையிலுள்ள திருக்கேதீச்சரமென்னும் தலத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமானே (எ - று,)

2. சுடுவார்பொடி நீறுந்நல துண்டப்பிறைக் கீளும்
கடமார்களி யானையுரி யணிந்தகறைக் கண்டன்
படவேரிடை மடவாளொடு பாலாவியின் கரைமேல்
திடமாவுறை கின்ருன்றிருக் கேதீச்சரத் தானே.

(இ - ள்) விபூதியையும் இளம் பிறையையும் யானைத்தோலையும் அணிந்த நீலகண்டரும், உமாதேவியாரோடு பிரியாதிருப்பவரும் யாரென்றுல், பாலாவி யென்னுந் தீர்த்தக்கரையிலுள்ள திருக்கேதீச்சரமென்னும் தலத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமானே (எ - று.)

3. அங்கம்மொழி யன்னுரவ ரமரர்தொழு தேத்த
வங்கம்மலி கின்றகடன் மாதோட்டநன் னகரில்
பங்கஞ்செய்த பிறைசூடினன் பாலாவியின் கரைமேல்
செங்கண்ணர வசைத்தான்றிருக் கேதீச்சரத் தானே.

(இ - ள்) இளம்பிறையைச் சூடினவரும், சிவந்த கண்களையுடையவரும் சர்ப்பக்கச்சை யணிந்தவரும் யாவரென்றால், வேத வேதாங்கங்களை யறிந்த பிராமணர்களும் தேவர்களும் வணங்கித் துதிக்கத் தோணிகள் நிறைந்த கடல் சூழ்ந்த மாதோட்டமென்னும் நல்ல ஊரிலுள்ள பாலாவி யென்னுந் தீர்த்தக்கரையிலிருக்கின்ற திருக்கேதிச்சர மென்னும் தலத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமானே (எ. று.)

4. கரியகறைக் கண்டன்னல கண்மேலொரு கண்ணன்
வரியசிறை வண்டியாழ்செயு மாதோட்டநன் னகருள்
பரியதிரை யெறியாவரு பாலாவியின் கரைமேல்
தெரியும்மறை வல்லான்றிருக் கேதீச்சரத் தானே.

(இ - ள்) நீலகண்டரும், நெற்றிக்கண்ணரும், அறிஞரால் அறியப்படும் வேதத்தில் வல்லரும் யாவரென்றால், வண்டுகள் கீதங்களைப்பாடுகின்ற மாதோட்டமென்னும் நல்ல ஊரிலுள்ள பெரிய திரையை வீசிப் பெருகும் பாலாவி யென்னும் தீர்த்தக்கரையிலிருக்கின்ற திருக்கேதீச்சரமென்னும் தலத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமானே (எ - று.)

5. அங்கத்துறு நோய்கள்ளடி யார்மேலொழித் தருளி
வங்கம்மலி கின்றகடன் மாதோட்டநன் னகரில்
பங்கஞ்செய்த மடவாளொடு பாலாவியின் கரைமேல்
தெங்கம்பொழில் சூழ்ந்ததிருக் கேதீச்சரத் தானே.

(இ - ள்) அடியார்களுக்குச் சரீரத்திலுள்ள நோய்களை நீக்கியருளுகின்றவர் தமது இடப்பாகத்திலுள்ள கௌரியம்பிகை யென்னும் அருட்சத்தியோடு தோணிகள் நிறைந்த கடல் சூழ்ந்த மாதோட்ட மென்னும் நல்ல ஊரிலுள்ள பாலாவி யென்னுந் தீர்த்தக்கரையிலிருக்கின்ற தென்னஞ் சோலை சூழ்ந்த திருக்கேதீச்சரமென்னும் தலத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமானே (எ - று)

6. வெய்யவினை யாயவ்வடி யார்மேலொழித் தருளி
வையமலி கின்றகடன் மாதோட்டநன் னகரில்
பையேரிடை மடவாளொடு பாலாவியின் கரைமேல்
செய்யசடை முடியான்றிருக் கேதீச்சரத் தானே.

(இ - ள்) அடியார் மீது வருந் தீவினைகளை நீக்கியருளுகின்றவர் யாவரென்றால் பூமியை விருத்தி செய்கின்ற கடல் சூழ்ந்த மாதோட்ட மென்னும் நல்ல ஊரிலுள்ள பாலாவி யென்னும் தீர்த்தக்கரையிலிருக்கின்ற திருக்கேதீச்சர மென்னும் தலத்தில் கௌரியம்பிகையோடு வீற்றிருக்கின்ற சிவந்த சடாமுடியையுடைய சிவபெருமானே (எ - று)



7. ஊனத்துறு நோய்கள்ளடி யார்மேலொழித் தருளி
வானத்துறு மலியுங்கடன் மாதோட்டநன் னகரில்
பானத்துறு மொழியாளொடு பாலாவியின் கரைமேல்
ஏனத்தெயி றணிந்தான்றிருக் கேதீச்சரத் தானே.

(இ - ள்) அடியார்கள்மீது வருகின்ற குற்றம்மிகுந்த நோய்களை நீக்கியருளுகின்றவர் யாவரென்றால், வெண்மையாகிய சங்குகள் மிகுந்து நிறையுங் கடல் சூழ்ந்த மாதோட்டமென்னும் நல்ல ஊரிலுள்ள பாலாவியென்னும் தீர்த்தக்கரையிலிருக்கும் திருக்கேதீச்சரமென்னுந் தலத்திலே பாலைப்போன்ற இனிய மொழியையுடையவளான கௌரியம்பிகையோடு வீற்றிருக்கின்ற பன்றியின் கொம்பை அணிந்த சிவபெருமானே. (எ - று.)

(வானத்துறு = வால்-நத்து-உறு = வெண்சங்குகள் நிறைந்த)

8. அட்டன்னழ காகவ்வரை தன்மேலர வார்த்து
மட்டுண்டுவண் டாலும்பொழின் மாதோட்டநன் னகரில்
பட்டவ்வரி நுதலாளொடு பாலாவியின் கரைமேல்
சிட்டன்னமை யாள்வான்றிருக் கேதீச்சரத் தானே.

(இ - ள்) அட்டமூர்த்தியாயுள்ளவரும், மேலானவரும், அழகாகத் திருவரையில் சுத்த மாயை ஆகிய சர்ப்பக்கச்சையணிந்து நம்மை அடிமைகொள்பவரும் யாவரென்றால், தேனையுண்டு வண்டுகள் சுழலுகின்ற சோலை சூழ்ந்த மாதோட்டமென்னும் நல்ல ஊரிலுள்ள பாலாவியென்னும் தீர்த்தக்கரையிலிருக்கும் திருக்கேதீச்சரமென்னும் தலத்திலே கௌரியம்பிகையென்னும் அருட்சத்தியோடு வீற்றிருக்கின்ற சிவபெருமானே. (எ-று.)

9. மூவரென விருவரென முக்கண்ணுடை மூர்த்தி
மாவின்கனி தூங்கும்பொழின் மாதோட்டநன் னகரில்
பாவம்வினை யறுப்பார்பயில் பாலாவியின் கரைமேல்
தேவன்னெனை யாள்வான்றிருக் கேதீச்சரத் தானே.

(இ - ள்) பிரமா விஷ்ணு உருத்திரர் எனவும், சக்தி சிவமெனவும் பேசப்படுகின்ற மூன்று கண்களையுடைய தலைவராகிய கடவுளும், என்னை அடிமைகொள்பவரும் யாவரென்றால், மாங்கனிகள் தூங்குகின்ற சோலை சூழ்ந்த மாதோட்டமென்னும் நல்ல

ஊரிலுள்ள இரு வினைகளையுங் கெடுக்கின்ற அடியார் வசிக்கும் பாலாவித் தீர்த்தக்கரையிலிருக்கின்ற திருக்கேதீச்சரமென்னும் தலத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமானே. (எ - று.)

10. கறையார்கடல் சூழ்ந்தகழி மாதோட்டநன் னகருள்
சிறையார்பொழில் வண்டியாழ்செயுங் கேதீச்சரத் தானை
மறையார்புக ழூரன்னடித் தொண்டன் னுரைசெய்த
குறையாத்தமிழ் பத்துஞ்சொலக் கூடாகொடு வினையே

(இ - ள்) கரிய கடல் சூழ்ந்த கழிக்கரை பொருந்திய மாதோட்டமென்னும் நல்ல ஊரிலுள்ள பக்கங்களிற் பொருந்திய சோலைகளில் வண்டுகள் கீதங்களைப் பாடும் திருக்கேதீச்சரமென்னுந் தலத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமானைப் பிராமணர்கள் புகழுகின்ற நம்பியாரூரனாகிய திருவடித்தொண்டன் பாடிய குறைவற்ற திருப்பதிகத்தைப் பாராயணஞ் செய்ய அவரைத் தீவினைகள் அடையா. (எ - று.)

திருச்சிற்றம்பலம்.

## வகைக்கொன்றாகச் சுரம் அமைக்கப்பெற்ற தேவாரப் பண்கள்

பண்—நைவளம். இராகம்—கெம்பீரநாட்டை.

தாளம்—ரூபகம். (சதுரஸ்ரஜாதி)

தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடிபூசியென் னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனைநாட்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே ||

க ம ப ா | பாபாபாமா || கமபா | மா கா சா சா ||
தோ . டு டைய செவி || யன்வி டையேறியோர் ||
க ம பா | மககசகாமா || மபா . | . . . . ||
தூ . வெண் ம . தி . சூ . || டி . | ||
பநிச்நி | பநிச்நிபாமா || மநிபம | மபமககாசா ||
. . . . | . . . . . . || . . . . | . . . . . . ||
கமபநி | ச்ாச்ா ச்ாச்ா || ச்நிச்க் | ச்நிநிப பாமா ||
கா . டு . டைய சுட ||லைப்பொ. டி . பூ . சியென் ||
மாபா | மககச காமா || பா . | மநிபம மபமக||கா. | சா...||
னுள்ளங் க . வர் கள் . || வன் | . . . . . . . . ||

பண்—நைவளம். இராகம்—நாட்டை.
தாளம்—ஜம்பை. கண்ட - சாப்பு.

தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடிபூசியென் னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனைநாட்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே ‖ (1)

. கம பா பாபா ‖ பமநிப பம ரீசா ‖
தோ. டு டைய ‖ செ . வி . யன் விடை ‖
. கம பா . பா ‖ மா . நிப பமரிச ‖
யே. றி யோர் ‖ தூ வெண் ம . தி . ‖
. கம மா பா. ‖ .. . . . ‖
சூ . டிக் . ‖ ‖
. கம பநி ச்ா ச்ா ‖ நிரிச்நி நிப பாபா ‖
கா . டு . டைய ‖ சு . ட . லைப் பொடி ‖
. கம நிநி பபமா ‖ . மப மரி சாசா ‖
பூ . சி . யெ. ன் ‖ னுள் ளங் கவர் ‖
. கம மா பா . ‖ மநிபம மரி ரீசா ‖
கள் வ ன் ‖ ---- -- - - -

பண்—கௌசிகம். இராகம்—பைரவி. தாளம்—ஆதி.

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினும் மெய்ப் பொருளாவது
நாத நாம நமச்சி வாயவே ‖ (2)

., ப பா , ம க மபம கரிரிக |
கா த . லா . . . கி . . க் |
சாரிக மாபா | பதநீ தநிச்ா ச்நிதாபா. ‖
கசிந் துகண் | ணீ. . . . . ம . ல் கி ‖
., தநி ச்ா . நிச்ரீ ரிச்ாநி தாபா |
ஓ . து வா. . . . ர் தமை |
. மப ச்நிதப | மா , பபமகா ரீசா ‖
நன் னெ . றிக் | குய் . . . ப் பது ‖
. ரிக மபதநி ச்ரிச்நி தப பமகாரீ ‖ சா,
. . . . . . . . . . . . . . . . |



பண்—கௌசிகம். இராகம்—பைரவி. தாளம்—ஆதி.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே (3)

., ப பா , ம காமா கமபா பமகா ரீ |
வாழ் க . வந் . . . த . . ணர் |
ரிகச ரிக மாபா | பதநீதநிச்ா ச்நிதா பா ‖
. . . வா னவ ரா . . . . . னி . . னம் ‖
., தநி ச்ா. ரீக்ரி ச்ா நிச்ரீ ரிச்நீதாபா |
வீழ் க . . . . தண் . . . பு . . னல் |
., மபச்நிதப | காமாகமபா பமகா ரீ ‖
வேந்த — னும் மோ . . . ங் கு . . க ‖
ரிகசப பா , த நிநிதத நிச்ச்ா |
. . . ஆழ் க . தீ . . . ய . தெல் |
., நிச் ரீக்ம்க்ரி | ச்ா நிச்ரீ ரிச்நீதாபா ‖
லா. மர . . . நா . . . ம . . மே . ‖
., தநி ச்ா . நிச்ரீ ச்ா . நிரிச்நி தாபா |
சூழ் க . . . வை . . . . ய க |
., மபதநிச்ா ச்நிதப காமாகமபா பமகாரீ. ‖
முந்து - - ய - - ர் தீ . . . ர் க . . வே ‖
ரிகமப-தநிச்ா-ச்நிதப-மகரிச |
ரீ , க-மரிகா | ரீ . சா . ‖

பண்—கௌசிகம். இராகம்—பைரவி. தாளம்—ரூபகம் (சதுரஸ்ரஜாதி)

வீடலால வாயிலாய் விழுமியார் கணின்கழல்
பாடலால வாயிலாய் பரவநின்ற பண்பனே
காடலால வாயிலாய் கபாலிநீள் கடிம்மதிற்
கூடலால வாயிலாய் குலாயதென்ன கொள்கையே ‖

| | | | |
|---|---|---|---|
| . ப த | பாமக காரீ ‖ | ரீ . | கரிசா . , ‖ |
| வீ . | டலா . ல ‖ | வா | யி . லாய் ‖ |
| சநி | சாமக ரீகா ‖ | மாபா | தாபா . . ‖ |
| விழு | மியா . ர் க ‖ | ணின் | கழல் ‖ |
| . பா | பாபா . பா ‖ | பா . | பாபாதாபா ‖ |
| பா | டலா ல ‖ | வா | யிலாய்ப ‖ |
| மா . | மபமக ரீகா ‖ | கமகம | பமபத பமகரி ‖ |
| ர | வ . நி . ன்ற ‖ | பண்ப. | . .னே. . . . . ‖ |
| கமபத | பாமக காரீ ‖ | ரீ . | கரிசா . நீ ‖ |
| . , கா . | டலா. , ல ‖ | வா | யி . லாய்க ‖ |
| சா . | மககரி ரீகா ‖ | மாபா | தா பா . ‖ |
| பா | லி . நீ . ள்க ‖ | டிம் | ம திற் ‖ |
| . த நி | ச்ரச்ர . ச்ர ‖ | ச்நிரீ | ச்நிதப பாபம ‖ |
| கூ . | டலா ல ‖ | வா . . | யி.லா. . கு . ‖ |
| பா . | ச்ர ச்நி தாபா ‖ | கமகம | பமபத பமகரி ‖ |
| லா | யதெ . ன்ன ‖ | கொ.ள்கை. | ..யே. . . . . ‖ |
| கமபம | கா . ரீ . ‖ | சா . | . . . . ‖ |
| , . . . | . . ‖ | . | ‖ |



பண்—கொல்லி. இராகம்—நவரோஸ். தாளம்—திஸ்ரதிரிபுடை.

மானி னேர்விழி மாத ராய்வழு
திக்கு மாபெருந் தேவிகேள்
பானல் வாயொரு பால னீங்கிவ
னென்று நீபரி வெய்திடேல்
ஆனை மாமலை யாதி யாயவி
டங்க ளிற்பல வல்லல்சேர்
ஈனர் கட்கெளி யேன லேன்றிரு
வால வாயர னிற்கவே. (5)

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| , கக | கரிகரி | ரிசசா ‖ | தசசநி | தநிசா | சநிதப ‖ | |
| மானி | நே . . ர் | வி . ழி ‖ | மா . த . | ரா . ய் | வ . ழு . ‖ | |
| , தச | கரிகச | சாசா ‖ | த ச ச | ரிகமக | கா . ‖ | |
| திக்கு | மா . . . | பெருந் ‖ | தே . வி | கே . - | ள் ‖ | |
| , கம பா | பா , ம | மககா ‖ | ரிகமாகா | மகரீ | சாசா ‖ | |
| பா . னல் | வா . | யொ.ரு ‖ | பா . . ல | னீ . ங் | கி வ ‖ | |
| , ச சக | ரீரிச | ரீ கா ‖ | கமபா . | கரீ , | சா. ‖ | |
| னென்று | நீப . | ரிவெய் ‖ | . . தி | டே . | ல் ‖ | |
| , ச ரி | ரீ | ரிசரீ ‖ | , கமபா | கரீ | சா. ‖ | |
| னென்று | நீ | ப – ரி | வெய்தி | டே– | ல் | |

பண்—பியந்தைக் காந்தாரம். இராகம்—நவரோஸ். தாளம்—ஆதி

எந்தை யீசனெம் பெருமானேறமர் கடவுளென்றேத்தி
சிந்தை செய்பவர்க் கல்லாற்சென்றுகை கூடுவதன்றால்
கந்தமாமல ருந்திக் கடும்புனனிவாமல்கு கரைமேல்
அந்தண் சோலைநெல் வாயிலரத்துறை யடிகடம்மருளே. (6)

, த சா சா ச நி சககரி சநிதப |
எந்தை ஈசனெம் பெருமான் . . . . |
, த ச ச ச ச ச நி | ச ச கரி கா . ||
னேறமர் கடவுளென் | றேத்தி . . ||
, க ம பா ப ம ம க கரிகரிகமபம கரிசா |
சிந்தை செய்பவர்க் கல்..லா... . .ல் |
, ச க ரி ரிரி ரிசரீ | கமபம கரீ, ரிசா , ||
சென்று கைகூடு . வ | தன் . . று . – – ல் ||

பண்—காந்தாரம். இராகம்—நவரோஸ் தாளம்—ரூபகம்.

மாதர்ப்பிறைக் கண்ணியானை மலையான் மகளொடும்பாடிப்
போதொடு நீர்சுமந்தேத்திப் புகுவாரவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடுபடாமலையாறடைகின்ற போது
காதன் மடப்பிடியோடுங் களிறுவருவன கண்டேன்
கண்டேனவர் திருப்பாதங் கண்டறியாதன கண்டேன். (7)

த ச சா | சா சா சா ச நி || சா , க | ரீ . சநிதப ||
மா. தர்ப் | பி றைக்க ண்ணி || யா . | னை . . . . ||
த ச சா | சா சா சா ச நி || சாகரி | கா . . . ||
மலையான் | ம க ளொடும் || பா . , | டி ||
க ம பா | பா ப ம கா கா || ரிகமா | மகரீ சா . ||
போ. தொ | டு நீர் . சு மந் || தே.. த் | தி . . . ||
ச க ரீ | ரீ ரீ ரிசரீ || கமபா | கரீ , சா . ||
புகுவா | ர வர் பி . ன் || பு . கு | வே . ன் ||
(3-ம், 4-ம் வரிகள் ...... 1-ம், 2-ம் வரிகள் போல்)
க ம பா | ம ப ம க காகரி || ரிசரீ | ரீரீ ரிசரீ ||
கண்டே | னவர் திருப் பாதங் || கண்ட | றியாத . ன ||
க ம பா | க ரீ ச ச நி த க || க ரீ , சா ... ||
கண் , | டே – – – – – – – – ன்



பண்—சீகாமரம். இராகம்—நாதநாமக்கிரியை. தாளம்—திஸ்ரஜாதித்திரிபுடை.

கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தங் கதிர்மதியம்
உள்ளார்ந்த சடைமுடியெம் பெருமானு ருறையுமிடந்
தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானூர்க் கரையனிடம் புள்ளிருக்கு வேளூரே. (8)

. , க மா | கமகரி | ரிசசா || க ம பா . | ப ம பா | ததபம ||
கள் . | ளா.ர்ந் | த . . || பூ . ங் | கொ. ன் | றை. . . ||
கரிரிகமா | கமகரி | ரிசசா || கமபா . | ப ம பா | த த பா ||
. . . கள் | ள . ர்ந் | த . . || பூ . ங் | கொ. ன் | றை. . ||
. , கமா | பா . | நிதபா || பமமா . | மா , ப | பமகா ||
மத | ம த் | த . ங் || கதிர் ம | தி . | ய . ம் ||
. , ம க ம | பா . | தா . || பததபபம | மா , ப | பமகா ||
உ . ள் | ளார் | ந்த . || ச .டை.மு. | டி . | யெம்– ||
., ம க ம | பா , த | நிததப || பா , தபம | கம்மப | ததபம ||
பெரு . | மா . | னு. . . || ருறை . . | யு . . . | மி. . . ||
கரிரி = கமா | கமகரி | ரிசசா ||
டம் = . . . . . . . . .

பண்—சாதாரி. இராகம்—பந்துவராளி தாளம்—ரூபகம்.

தலையே நீ வணங்காய்—தலை மாலை தலைக்கணிந்து
தலையாலே பலி தேருந் தலைவனைத்—தலையே நீ வணங்காய் (9)

க ம பா | . ப ம கா மா || பா . . . பா மா ||
தலையே | நீ . வணங் || காய் த லை ||
பா தா | தா ச்நி தா நீ || ச்நிச்ா ச்ா . . . ||
மா லை | த லை க் கணிந் || து . . . ||
நி ச் ரீ | . ச்ா ச்ா நீ || தா நீ | ச்ாநிதபாபம ||
தலையா லே ப லி தேருந் த லை . வனைத்
ப ச் நி த | ப ம கா கா ரீ || கமபம | கா ரீ சா . ||
தலையே . . . நீ வணங் கா . . . . ய்

பண்—தக்கேசி. இராகம்—காம்போதி. தாளம்—ஆதி.

பூவார்மலர்கொண்டடியார்தொழுவார் புகழ்வார்வானோர்கள்
மூவார் புரங்க ளெரித்த வன்று மூவர்க் கருள்செய்தார்
தூமா மழைநின் றதிர வெருவித் தொறுவின் னிரையோடும்
ஆமாம் பிணைவந் தணையுஞ் சார லண்ணு மலையாரே. (10)

| | | |
|---|---|---|
| . தா ச்ா . நீதா தா . | . தத தா . | தா தா நிநிதப |
| பூ வார் மலர் கொண் | டடி யார் | தொழு வா . . ர் |
| . பப தாபா தாச்ா ச்நிதா | தநிபா . . | . . . . |
| புகழ் வார் வா . னோர் . . | கள் . . . | . . . . . |
| . பத தாரீ ச்ா ச்ா ச்ா . | . ச்நி ச்நிதா | பமகா பா, தச்ா |
| மூ . வா.ர் புரங் க | ளெரித்த . . | வ . ன் று . . |
| . பத தச்தப பமகா ரிபமக | கரீச சநிபத | சா . . . |
| மூ . வர் ·க் க.ருள்செய்... | தா . . . . . . | . . . ர் |
| . கா பாதா ச்ாச்ா ச்ாச்ா | . ரிக் க்ா . | காகா க்மக்ரி |
| தூ மா . மழை நின் | றதிர | வெரு வி . . த் |
| . ரிரி ரிக்ரிச் ச்ாச்ா நிதச்ரி | ரிக்ரிச் ச்நிதா | தநிபா . . |
| தொறுவி..ன்னிரையோ .. | டு . . . . . | . . ம் . . |
| . பத ச்நிதா ச்ாச்ா ச்ா . | . ச்ரி ச்நிதா | பமகா பா, தச்ா |
| ஆ . மா . ம் பிணை வந் | தணை யு . ம் | சா . . ர . ல் |
| . மப பச்தப பமகா ரிபமக | கரீச சநிபத | சா . . . |
| அண்ணு . . . ம . லை யா . . . | ரே . . . . . . | . |



பண்—காந்தாரம். இராகம்—நவரோஸ். தாளம்—ஆதி.

பவனமாய்ச்சோடையாய்நாவெழாப் பஞ்சுதோய்ச்சட்டவுண்டு
சிவனதாட் சிந்தியாப் பேதைமார் போலநீ வெள்கினையே
கவனமாய்ப் பாய்வதோ ரேறுகந் தேறிய காளகண்டன்
அவனதா ரூர்தொழு துய்யலாமையல் கொண்டஞ்ச னெஞ்சே.

| | | |
|---|---|---|
| சசசா சா . கரிசா சநிதப | தசசா சா . | ரிககச சா . |
| பவன மாய்ச் சோ.டை யா . . ய் | நா . வெழாப் | பஞ்சு.தோய் |
| தா சா சாகரி கா . கா . | கமபா பா . | பமபமகா . |
| சட்ட வு . ண் டு . | சிவன தாட் | சிந்தி . யாப் |
| கரிகரி கமபம கமகரி சா . | சா ரீ ரீரிக | ரீ . சா . |
| பே.தை. மா..ர் போ·ல நீ | வெள்கினை.. | யே . |

பண்—நர்த்தராகம். இராகம்—பந்துவராளி. தாளம்—சதுரஸ்ர ஏகம்.

படைகொள் கூற்றம் வந்துமெய்ப்
பாசம் விட்ட போதின்கண்
இடைகொள் வாரெ மக்கிலை
யெழுக போது நெஞ்சமே
குடைகொள் வேந்தன் மூதாதை
குழகன் கோவ லூர்தனுள்
விடைய தேறுங் கொடியினன்
வீரட் டானஞ் சேர்துமே. (12)

| | | | |
|---|---|---|---|
| , கம பா | பாபா | பாபா | பா . |
| படைகொள் | கூ.ற்றம் | வந்து | மெய் |
| , பதத | பாபம | பதநிச் | ச்ா . |
| பா . சம் | விட்ட . | போ . தின் | கண் |
| , பத நிச் | க்ரிச்ா | சநிச்ா | நிதபம |
| இடைகொள் | வா . ரெ | ம . க்கி | லை . . . |
| பச்ா | நிதபம | கரிகா | மமகம |
| யெழுக | போ . து . | நெஞ்ச | மே . . . |
| . கரீ , | சா . | . . | . . |

பண்—பழம்பஞ்சுரம். இராகம்—சங்கராபரணம். தாளம் ஆதி.

மற்றுப் பற்றெனக் கின்றி நின்றிருப்
பாதமே மனம் பாவித்தேன்
பெற்றலும் பிறந் தேனினிப் பிற
வாத தனமைவந் தெய்தினேன்
கற்றவர் தொழு தேத்துஞ் சீர்க்கறை
யூரிற் பாண்டிக் கொடுமுடி
நற்றவா வுனை நான்மறக் கினுஞ்
சொல்லுநா நமச்சி வாயவே. (13)

| | | | | |
|---|---|---|---|---|
| , க | கா , ரி | ரிகரிச | சா சா | |
| மற் | று ப் | ப . . ற் | றெனக் | |
| . , நி | சரிகம | பா . | மககரி | \|\| |
| இன் | றி . . . | நின் | றி . ருப் | \|\| |
| சா , கம | பா , ம | கமபம | கா . பமா , | |
| . பா . | த . | மே . . . | ம னம் . | |
| மரி — கம | பா . | பமபதா, பா | பா . | \|\| |
| . . —பா . | வி த் | தே . . . . | ன் | \|\| |
| . , ம | கா மா | பா த நி | ச்ா ச்ா | |
| பெற் | ற . | லு . ம் | பி றந் | |
| . , நி ச் | க் ரி ரி ச் | நி ச் த நி | ச்ா ச்ா | |
| தே . | னி . . | னி . . ப் | பி ற | \|\| |
| . , மப | பா ச்ா | நி தபா | பமகா | |
| வா . | த . | த . ன் | மை . வந் | |
| . , ரி | கமபா | பமகரி | ரிகரிச | \|\| |
| தெய் | தி . . | னே . . . | . . . ன் | \|\| |



பண்—வியாழக்குறிஞ்சி. இராகம்—சௌராட்டிரம். தாளம்—ஆதி.

பந்தத்தால் வந்தெப்பால் பயின்று நின்ற வும்பரப்
பாலே சேர்வா யேனோர்காண் பயில்கண முனிவர்களுஞ்
சிந்தித்தே வந்திப்பச் சிலம்பின் மங்கை தன்னொடுஞ்
சேர்வார் நாணு ணீள்கயிலைத் திகழ்தரு பரிசதெலாஞ்
சந்தித்தே யிந்தப்பார் சனங்க ணின்று தங்கணுற்
றுமே காணு வாழ்வாரத் தகவுசெய்தவ னதிடங்
கந்தத்தா லெண்டிக்குங் கமழ்ந் திலங்கு சந்தனக்
காடார் பூவார் சீர்மேவுங் கழுமல வளநகரே. (14)

| | | | | |
|---|---|---|---|---|
| , கமாபம | கரிசா | , மகம | பா . | |
| பந்த . த் | தா.ல் | வந்தெப் | பால் | |
| , மதப | பமமா | கமாபம | கரிசா | \|\| |
| பயின்று | நின் ற | வும்ப.. | ர . ப் | \|\| |
| , மகம | மா மா | மக மாபம | கரிசா | |
| பா . லே | சேர்வா | யேனோ . ர் | கா . ண் | |
| , ரிபபம | கரிகபம | கரீ , | சா . | \|\| |
| பயில்கண | முனிவர்க . | ளும் | . . . | \|\| |

பண்—செவ்வழி. இ-ம்—எதுகுலகாம்போதி. தாளம்—திஸ்ரசாதி திரிபுடை.

கூனற் றிங்கட் குறுங்கண்ணி
கான்றந் நெடு வெண்ணிலா
ஏனற் பூத்தம் மராங் கோதை
யோடும் விராவுஞ்சடை
வான நாடன் னமரர்
பெருமாற் கிட மாவது
கானல் வேலி கழிசூழ்
கடனாகைக்கா ரோணமே. (15)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| . , ச சா | சாசரி | ரீ மா | க ம பா . | பமபத | தநிதப |
| கூனற் | றி . ங் | க ட் | கு . றுங் | கண் . . | ணி . . . |
| . , ம பா | தா . | தாதா | தா , நிதப | பா . | பா . |
| கான் | றன் | நெ டு | வெண்ணி.. | லா | . . |
| . , ப தா | ச்ா . | ச்ா . | ச்நிச்நிதா | தாதப | ததபா |
| வேனற் | பூ த் | த ம் | ம . ரா . ங் | கோ . . | தை . . |
| . , மமா | கமபா | பாதா | பதச்தபம | காகரி | ரிபமக |
| யோடும் | வி . . | ரா . | வும்ச . . . | டை . . | . . . . |
| | | | | | [ . . . . |
| க ரி ச சா , | | . . | . . | | |



பண்—பஞ்சமம். இராகம்—சௌராட்டிரம். தாளம்—ரூபகம்.

பைங்கோட்டு மலர்ப்புன்னைப் பறவைகாள் பயப்பூரச்
சங்காட்டந் தவிர்த்தென்னைத் தவிராநோய் தந்தானே
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன் பணிசெய்ய
வெங்காட்டு ளனலேந்தி விளையாடும் பெருமானே. (16)

| | | | |
|---|---|---|---|
| . கம | க ரீ , சா . | . க ம | பா . த த ப ம |
| பைங் | கோ . ட்டு | மலர்ப் | புன் னை . . . |
| கரிகம | கரீ , சா . | . கம | பா . பா . |
| . . பைங் | கோ . ட்டு | மலர்ப் | புன் னை |
| . ப த | நிச்ரீ ச்ா . | . நி த | தா நி த பா . |
| ப ற | வை . , காள் | ப ய ப் | பூ . . ரச் |
| . பத | நீச்ாரிரிச்ா | . நி த | த்ா நி த பா . |
| சங் | கா ட் ட . ங் | த . | விர்த் தென்னை |
| . பத | ப ம மா மா . | . ம க | மா , நி நி த த ப |
| தவி | ர . . நோய் | த ங் | தா . னே . . . |
| பா . | . . . . | பமகம | ரீ . சா . |
| . | . . . . | . . . . | . . |

பண்—புறநீர்மை. இராகம்—பூபாளம். தாளம்—ஆதி.

மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழ லுருவன் பூதநா யகனால்
வேதமும் பொருள்களு மருளி
அங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த
ஆலவா யாவது மிதுவே. (17)

| | | | | |
|---|---|---|---|---|
| . கா | பா பா | பா பா | த த பா | |
| மங் | கையர்க் | க ர | சி . . | |
| . க க | பா பா | க க த ப | க ரி சா | ‖ |
| வள | வர்கோன் | பா . . . | வை . . | |
| . ச ரி | கா கா | க ரி க ரி | ரி ச சா | |
| வரி | வளைக் | கைம் . . | ம . ட | |
| . க க | பா பா | க க த ப | க ரி சா | ‖ |
| மா . | . னி | . . . . | . . . | ‖ |
| . கா | பா தா | ச்ச்தச் | ச்ா . | |
| பங் | க ய ச் | செ . . ல் | வி | |
| . ச் ரி | க் ரி ச்ா | ச்ா . | ச்ா த த | ‖ |
| பாண் | டி . மா | தே | வி . . | ‖ |
| பா ப த | ச்ா ச்ா | ச்ா ச் த | த ப பா | |
| ப ணி . | செய்து | நா . . | டொ . றும் | |
| . க க | பா . | க க த ப | க ரி சா | ‖ |
| பர | வ | . . . . | . . . | ‖ |



பண்—செந்துருத்தி. இராகம்—மத்யமாவதி. தாளம்—ஆதி.

மீளா வடிமை யுமக்கே யாளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போ லுள்ளே கனன்று முகத்தான் மிகவாடி
ஆளா யிருக்கு மடியார் தங்க ளல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதிரே ‖ (18)

| | | | |
|---|---|---|---|
| ., ரி சாநிச சாசநிரிச ரீ. | ., ரிம பா . | பா பமநிப பமரீ . . | ‖ |
| மீ ளா . . வடி . . . மை | யுமக் கே | யா . . . . ளா . ய்ப் | ‖ |
| ., நிச சரிமரிச சநிசரி ரீரிப | பபமரீ , . | சா . . . | ‖ |
| பிற ரை . . . வே . ண்டா . . | தே . . | . | ‖ |
| ., ரி மாரிம பா . நிநிபம | பா , மபா . | பாமபநிப பமரீ . . | ‖ |
| மூ ள . . த் தீப்போ . . . | . லுள்ளே | கன . . ன் று , . | ‖ |
| ., நிச ரிமரிச சாசநி நிசரிப | பபமரீ , . | சா . . . | ‖ |
| முகத் தா . . ன் மிக . வா . . . | டி . . . | . | ‖ |

பண்-மேகராகக்குறிஞ்சி. இராகம்-நீலாம்பரி. தாளம்-மிஸ்ரஜாதி திரிபுடை

புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
யறிவழிந்திட் டைம்மே லுந்தி
அலமந்த போதாக வஞ்சேலென்
றருள்செய்வா னமருங் கோயில்
வலம்வந்த மடவார்க ணடமாட
முழவதிர மழையென் றஞ்சிச்
சிலமந்தி யலமந்து மரமேறி
முகில்பார்க்குந் திருவை யாறே ‖ (19)

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ., க மா | பா . | பா . | ‖ மப ச்ா . | நீ ச் நி | பா . | ‖ |
| புல | னைந் | தும் | ‖ பொறிக | லங் . . | கி | ‖ |
| மா , ககம | பதா , | ச்ச்தப | ‖ மபபமமக | ரிகமா | கசசா | ‖ |
| . நெறிம | ய ங் | கி . . . | ‖ ய . றி . வ | ழிந் . | தி . ட் | ‖ |
| நிசமாகா | கரிரிப | பமமக | ‖ ரிகமாகா | ரிககச | சா . | ‖ |
| டை . மே . | லுந் . . . | தி . . . | ‖ . . . . . | . . . . | . | ‖ |

பண்—குறிஞ்சி. இராகம்—எதுகுலகாம்போதி. தாளம்—திரிபுடை.

முத்து விதான மணிப்பொற் கவரி முறையாலே
பத்தர்க ளோடு பாவையர் சூழப் பலிப்பின்னே
வித்தகக் கோல வெண்டலை மாலை விரதிகள்
அத்த னூரு ராதிரை நாளா லதுவண்ணம். (20)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மா கா மா | பா . | பா . ‖ | ம ம தா . | பா பா | பா . ‖ |
| முத்துவி | தா | ன ‖ | மணிபொற் | க வ | ரி ‖ |
| ம ம மா ம த | தநிதப | பா . ‖ | தா ச்ா ச்ா | ச்நி தா | பா. ‖ |
| முறையாலே. | . . . . | . ‖ | பத்தர்க | ளோ . . | டு ‖ |
| மா பா பா | தச்தப | மகரீ ‖ | ச ச சா ரீ | மா மா | தா. ‖ |
| பாவையர் | சூ . . . | ழ . ப் ‖ | பலிப்பின் | னே . | . ‖ |
| பா . . | . . | . . ‖ | | | |

பண் - சாதாரி. இராகம்—பந்துவராளி. தாளம்—ஜம்பை.

மருந்தவை மந்திர மறுமைநன் னெறியவை மற்றுமெல்லாம்
அருந்துயர் கெடுமவர் நாமமே சிந்தைசெய் நன்னெஞ்சமே
பொருந்துதண் புறவினிற் கொன்றைபொன் சொரிதரத்
[துன்றுபைம்பூம்
செருந்திசெம் பொன்மலர் திருநெல்வே லியுறை செல்வர்தாமே]

. கமபா . பா பமதாபா . பா ‖ . கமபா . பா பமதாபா. பா ‖
மருந்.த வை ம.ந் தி ரம் ‖ மறுமை நன் நெ. றி ய. வை ‖
. பாதா தா . ச்நிதச் ச்ா . . ‖
மற் றும் எல் லா . . . ம் ‖
. ச்ச்க்ரி ச்ாச்ாச்நிதாச்ா.ச்ா ‖ தச்ச்ா. ச்நிதநிச்நி தநிநிதபமபம ‖
அருந்து . யர் . கெ . டு ம வர் ‖ நா. ம மே... சிந். தை. . .செய் ‖
காகா கரிகா பமகம கரீ , சா . ‖
நன்நெஞ் ச . . மே . . . . . , ‖



பண்—பழந்தக்கராகம் இராகம்—சுத்த சாவேரி. தாளம்—திரிபுடை.

மனைக்காஞ்சி யிளங்குருகே மறந்தாயோ மதமுகத்த
பனைக்கைம்மா வுரிபோர்த்தான் பலர்பாடும் பழனத்தான்
நினைக்கின்ற நினைப்பெல்லா முரையாயோ நிகழ்வண்டே
சுனைக்குவளை மலர்க்கண்ணாள் சொற்றூதாய்ச் சோர்வாளோ.

| | | |
|---|---|---|
| ., ப த ச் | தா , ப | பா . ‖ |
| மனைக் . | கா | ஞ்சி ‖ |
| தா பா . | ம த ப ம | ரி ச ரி ம ‖ |
| இ ள ங் | கு . . . | ரு . . . ‖ |
| ப த த = ப த ச் | தா , ப | பா . ‖ |
| கே . . = மனைக் | கா . | ஞ் சி ‖ |
| ச் த ப த ப ம | ப ம ரி ச | ரி ம ப த ‖ |
| இ . . ள . ங் | கு . . . | ரு . . . ‖ |
| பாதபபம = பபம | பா , த ச்ா | தா பா ‖ |
| கே . . . . =மறந் | தா . . | யோ . ‖ |
| மாமபபமரீ . . | ச ரி ரி ம | ம ப ப த ‖ |
| ம த . மு . . | க . . . | . . . த் ‖ |
| பாதபபம = பதா | ச்ா . | ச்ா . ‖ |
| த . . . . = பனைக் | கை | மா ‖ |
| ரீ ச்ா . | தாரி ச்ச்த | தா பா ‖ |
| வு ரி | போ . . . த் | தா ன் ‖ |
| பாதபபம = பதா | ச்ா . | ச்ா . ‖ |
| . . . . . = பனைக் | கை | மா ‖ |
| த ச்ரிம்ரிச் | தாரிச்ச்த | தா த ப ‖ |
| வு . ரி . . . | போ. . .ர். த் | . . ‖ |
| பாதபபம = பபம | பா, த ச்ா | தா பா ‖ |
| தா . . . = பலர் | பா . . | டு ம் ‖ |
| மா ப ப மரீ . . | ச ரி ரி ம | ம ப ப த ‖ |
| ப . ழ . . | ன . . . | . . . த் ‖ |
| பா த ப ப ம = | | |
| தா . . . , | | |

பண்—காந்தார பஞ்சமம் இராகம்—கேதாரகௌளம். தாளம்—ஆதி.

ஆடினாய்நறு நெய்யொடுபா றயி
ரந்தணர்பிரி யாதசிற்றம்பலம்
நாடினாயிடமா நறுங்கொன்றை நயந்தவனே
பாடினாய்மறை யோடுபல்கீதமும்
பல்சடைப்பனி கால்கதிர்வெண்டிங்கள்
சூடினாயரு ளாய்சுருங்கவெம தொல்வினையே. (23)

| | | | | |
|---|---|---|---|---|
| . ச்ா | ச்ா . | ச் நி தா | பா பா | \| |
| ஆ | டி | ஞ . ய் | ந று | |
| . ம ப | தா பா | மா கா | ரீ ரி க | \|\| |
| நெய் | யொடு | பா ல் | தயிர் .. | |
| சா ச ரி | மா மா | பா பா | பா பா | \| |
| அ ந் | த ணர் | பி ரி | யா த | |
| . மா | பா ப ச் | ச் ச் நி த | பா . | \|\| |
| சிற் | றம் ப | லம் | . . | |
| . மா | பா நீ | சா . | ச்ா ச்ா | \| |
| நா | டி | ஞ | யி ட | |
| ச் நி ச்ா | க் ரி ரி ச் | ச் நி நி த | த ப பா | \|\| |
| . . . | . . . . | . . . . | . . . , | |
| ச்ா . | ச் நி தா | த ப ம க | க ரி ரீ | \| |
| ந | று ங் | கொன் | றை | |
| . ரி ரி | மா பா | ச் ச் நி த | பா . | \|\| |
| நயந் | தவ | னே | . | |
| ரீ மா | பா ச்ா | ச் நி நி த | பா . | \| |
| . . . | . . | . . . . | . | |
| ப ப த ப | ம க ரீ | ரி ரி க ரி | சா . | \|\| |
| . . . . | . . . | . . . . | . | |



பண்—தக்கராகம். இராகம்—காம்போதி. தாளம்—கண்ட ஏகம்.

பொடியுடை மார்பினர் போர்விடை யேறிப்
பூதக ணம்புடை சூழக்
கொடியுடை யூர்திரிந் தையங்
கொண்டு பலபல கூறி
வடிவுடை வாணெடுங் கண்ணுமை பாக
மாயவன் வாழ்கொளி புத்தூர்க்
கடிகமழ் மாமல ரிட்டுக்
கறைமிடற் றானடி காண்போம். (24)

| | | | | |
|---|---|---|---|---|
| த த ச் நீ | தா த தா | தா த தா | தா நி நி த | \| |
| பொடியுடை | மார்பினர் | போர்விடை | யே றிப் | \| |
| பா த பா | மா க கா | பா த தா | த நீ பா | \| |
| பூ த க | ணம் புடை | சூ . ழ | . . . க் | \| |
| ம க ப தா | ச்ா ச் ச்ா | ச் நி தா , | த நீ பா | \| |
| கொடியிடை | யூர்திரிந் | தை . ய | . . ங் | \| |
| தா ச் நீ | தா த தா | தா தா , | த நீ பா | \| |
| கொண்டு ப | ல ப ல | கூ றி | . . . | \| |
| ம க ப தா | ச்ா ச் ச்ா | ரி க் க்ா | க்ா க் ம் ரி | \| |
| வடி வுடை | வாணெடுங் | கண் ணுமை | பா . . ல் | \| |
| ரி க் ரி ச்ா | ச்ா ச் ச்ா | நீ தா , | தநீபா | \| |
| மா . யவன் | வாழ்கொளி | புத்தூர் | . . க் | \| |
| ப ப த தா | ச்ா ச் ச்ா | நீ தா , | தநீபா | \| |
| கடி கமழ் | மா ம ல | ரிட்டு | . . க் | \| |
| பத ச் ச்ா | த ப ம க க | க ரி ரீ , | ரிசசா | . . , \|\| |
| கறைமிடற் | று . . னடி | காண்போம் | . . . | . . , \|\| |

பண்-கொல்லிக்கௌவாணம். இராகம்-நவரோஸ். தாளம்-ஏகம்-கண்ட ஜாதி.

தில்லைவா ழந்தணர்தம் மடியார்க்கு மடியேன்
  றிருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே யென்னாத வியற்பகைக்கு மடியே
  னிளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
  விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டற் கடியேன்
அல்லிமென் முல்லையந்தா ரமர்நீதிக் கடியே
  னாரூர னாரூரி லம்மானுக் காளே. (25)

| | |
|---|---|
| . தச சா . சக | கரீச சா சநி தப |
| தி ல்லை வா | மு . ந் த ணர் தம் |
| . த த சா . சா | . கரி கா . . |
| அடி யார்க் கு | மடி யேன் |
| பம கரி சரி கமபமு | கரி கம கரி சா சா |
| . . . . . . . . . . . | . . தில் லை . . வா |
| சா . சா சநி தப | . த த சா . சா |
| மூந் த ணர் தம் | அடி யார்க் கு |
| . கரி கா . . | . கம பா . பா |
| மடி யேன் . . | திரு நீ ல |
| , மமப பம காபம | கரி சக ரீ . ரீ |
| . கண் டத் து . . | . . குய வ னார்க் |
| கமபா ரீ . சா | . . . . . |
| க . டி யே ன் | |



திருநேரிசை. இராகம்—நவரோஸ்.

மனைவிதாய் தந்தை மக்கண் மற்றுள சுற்ற மென்னும்
வினையுளே விழுந்த ழுந்தி வேதனைக் கிடமா காதே
கனையுமா கடல்சூழ் நாகை மன்னுகா ரோணத் தானை
நினையுமா வல்லீ ராகி லுய்யலா நெஞ்சி னீரே. (26)

த த ச சா நிசரிகமக கரீரிச ச நி நி த தா
மனைவி தாய் . . . . . . . . . . . . . .
தா சரிமக சரிகமக கா க க
தந் . . . . . . . . தை மக்கள்
மப பமமமம , , மக ரிகரீ பமபா
மற்று ள்ள . . . சுற்ற மென் . . னும் . .
பா ப த ப ப ம ம க க கா க ம க க ரி ரி ரீ
சரிகம கரீ கா ரி ச நி தா சா
. . . . . . . . . . . . .

கம பததா , , ப பத பதச்ா தபபமமா
வினை யுள் . ளே . . . . . . . . . . . . .
மா பததப மபபம மக கரிப பமபா
வி மூந் . . . . . . த . மூந் . . தி . .
ததப பமமககரி ச நி தா சா
. . . . . . . .
தா சா ரிகா கச ரீரீ ரிப பமமககரிச நி தா
வே த னைக் . இ . டமா கா . தே . . . . . . . .
தா சரிகமக ரிகாரி ச நி தா சா
. . . . . . . . . . . . . .

இராகம்—ஹரிகாம்போஜி. திருத்தாண்டகம்.

பாரார் பரவும் பழனத் தானைப்
பருப்பதத் தானைப் பைஞ்ஞீலி யானைச்
சீரார் செழும்பவளக் குன்றொப் பானைத்
திகழுந் திருமுடிமேற் றிங்கள் சூடிப்
பேரா யிரமுடைய பெம்மான் றன்னைப்
பிறர்தன்னைக் காட்சிக் கரியான் றன்னைக்
காரார் கடல்புடைசூ ழந்த ணுகைக்
காரோணத் தென்ஞான்றுங் காண லாமே. (27)

பததா ——————— பபபா ——————
பா . ரார் பரவும்
மப தநிதப மபதா பாபா ——————— மா
பழ ன . . . . . . . த்தானை .
பதபமகா பமகரி கமபா மபதாபா ——————
. . . . . . . . . . . . . . . .

பததா தததா பதநீ தாதா
பா . ரார் பரவும் பழனத் தானை
பதாநிதா பாபா மப தநிதப மபதாப பாபா
பருப்பதத் தானை பைஞ் ஞீ . . . . . . லி யானை

மாமா மகமபா பமபதா தபதநீ ——— ———————
சீ ரார் . . . . . . . . . . . .
நிதநிச் நிதபம கமபதநிச் நிதபம கமபத நிதபம
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
கமப மா பதபத பமகாமப மகரீ காமா பமபா
. . . . . . . . . . . . . . . . . . . . .
பததா ததா ததத பதநீ தாபா பததப பபபபபம
சீ.ரார்செழும் பவளக் குன்றொப பானைத் திகழும் திருமுடிமேற்
மப தநி தப மப தாப பா பா
திங்கள் . . . . . . . சூ டி



மாமா மமமமம கமபா பாபா மபதாதா தாதா
பேரா யிரமுடைய பெம்மான் றன்னைப் பிறர்தன்னைக் காக்ஷிக்
தததபதநீ தாதா தபதநிதபம கமபா மபதா ——————
கரியான் . . றன்னைக் . . . . . . . . . . . . .
பதநீ ——————— தநிசநீ ——————— தாபா மபதநிதபதாப

தநிச்சா ச்ச்ச்ச் ச்ாநீ தநி ச்ரி ரிச்ச்ா
கா . ரார் கடல்புடை சூழ் அந் த . ணு . கை
தநிச்ரி ச்நிதபமக மபதநிச்ரி ச்நீ தா

தநிச்ா ச்ச்ச்ச் ச்ா ச்ரிக் க்ாம்க் ரிச்ச்ா
கா . ரார் கடல்புடைசூழ் அந்த ணு . . . . கைக்
தநிரிரி ச்நிதா தப ச்ச்நிதபமா மாமா மா
கா . ரோ . . . ணத் தெஞ் ஞா . . . . ன்றும் கா ண லா
மகமபா பமபதா தபதநீ நிதநிச்ா நிச்நிதபம
மே . . . . . . . . . . . . . .
கமபதநிச்ா தநீதபா , ம மபதநிதப மபதா , பபா ——————

மா ——————— பதபமகா மபமகரீ காமபா மதா பா

பா தததபம ரிகரீ சா சநிதபதாநீசா



